உ

சிவமயம்

விருத்தாசலம்

# ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள்

## அபிஷேகமாலை

மூலமும் உரையும்

திரிபதார்த்த வுண்மை உபதேச விளக்கமும்

இவை

ஷை சுவாமிகளாதீனம்

சொக்கலிங்க சுவாமிகளால்

இயற்றப்பட்டு

சேலம் செவ்வாய்ப் பேட்டை

S. C. நாகிசெட்டியார் அவர்களால்

பார்வையிடப்பட்டு







சென்னை குருபசவா அண்டு கம்பெனி லிமிடெட்

அவர்களால் பதிப்பிக்கப்பட்டன

ரிஜிஸ்தர் செய்யப்பட்டது.] [விலை அணு 6.

1935

2/6

# முன்னுரை



ஸ்ரீகுமார தேவர் அபிஷேகமாலை யென்னும் இந் நூலின் அச்சுப் பிரதி யொன்று வெகு நாட்களுக்கு முன்னர் எனக்குக் கிடைத்தது. இது சைவர்க்கும் வீரசைவர்க்கும் பேருபயோகமா மென்பது மிகை யன்று. இவ் வரிய நூல் கிடைப்பதரிதாயினமை கருதி, இதனை அச்சியற்றத் தொடங்குங்கால் அதன் நடுவில் ஒரு ஏடு குறைவுபட்டிருந்தது. ஆதலால், அதனை யச்சியற்றுதலை நிறுத்த நேர்ந்தது. வேறொரு அச்சுப்பிரதிக்காக முயன்றேன். தெய்வாதீனமாய் மற்றொரு நண்பர் சில நாட்களுக்கு முன்னர் ஒரு அச்சுப் பிரதியை எனக்கு உதவினர். இந்தப் பிரதியிலும் ஒரு ஏடு முதலில் குறைவுபட்டிருந்தது. இவ் விரண்டு பிரதிகளையுஞ் சோதித்து அவசியமான சில திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. இவ் வபிஷேக மாலையின் பத்துச் செய்யுட்களில் சாஸ்திரார்த்தங்கள் நிரம்பிய முதல் ஐந்து செய்யுட்களுக்கு மாத்திரம் பதவுரையும், பத சாரமும், விரிவுரையும் நூலாசிரியரால் எழுதப்பட்டிருந்தன. உரையில்லாத காப்புச் செய்யுளுக்கும் மற்ற ஐந்து செய்யுட்களுக்கும் உரை எழுதி ஸ்ரீகுமாரதேவர் சரித்திரமும், இவர் அருளிச்செய்த பெரியநாயகியம்மை பதிகமும், இவர் திருவுருவப் படமும், ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய குமாரதேவர் நெஞ்சுவிடு தூதும், பதிகமும் சேர்த்து இந்நூலை வெளியிடுகின்றேன்.

சென்னை }
4—6—35 }

S. C. நாகி செட்டி.



குமார தேவர்.

சிவமயம்

# ஸ்ரீகுமார தேவர்

## சரித்திரச் சுருக்கம்

---

இற்றைக்குச் சுமார் இருநூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னர் அகண்ட பரிபூரண சச்சிதாநந்த ஸ்வரூபமே ஒருருவாகத் திருமேனி கொண்டருளிய ஸ்ரீ குமாரதேவர் அவதரித்தார். பொது வாய் ஒருவர் கன்னட தேயத்தவரென்பதற்குத் தேவர் என்னும் பட்டமும் ஐயர் என்னும் பட்டமுமே போதிய சான்றும். குகை நமசிவாய தேவர், அருணமசிவாய தேவர், விரூபாக்ஷ தேவர் என்று கன்னட தேயத் துறவிகளுக்குப் பெயர் வழங்கிவருதலானும், இலிங்க தாரிகளான வீரசைவ சரணர்களிற் பண்டிருந்த பலர்க்கும் கொக்கி தேவர், மடிவாலமாச்ச தேவர், மல்லையர், சோமையர், கல்லையர், வங்கையர், சித்தராமையர், கின்னரப் பிரம்மையர், சவுண்டையர் என்று தேவர் ஐயர் என்னும் பட்டம் வழங்கிவருதலானும், இவரது மாணவர் குழுவினர் இலிங்கதாரிகளாகவே இருத்தலானும் ஸ்ரீ குமாரதேவரைக் கன்னடதேயத்தவரே என்று கூறலாம். தென் தேயத்து வீரசைவர்க்கு ஐயர் என்னும் பட்டம் வழங்குதலு முண்டு.

இவர் முற்பிறப்பில் சிவபெருமானை நோக்கி மல்லிகார்ஜுந பர்வதத்தில் நிஷ்காம தவஞ் செய்கையில், அவருடன் கூட வேறொருவர் அவ்விடம் தவஞ் செய்துகொண்டிருந்தார். அப்போது சிவ பெருமான் அவர் தவத்திற்கிரங்கிப் பிரத்தியட்சமா யெழுந்தருளி, "அன்பனே! உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்; அருளுவோம்." என்று கேட்க, அவர் ஒன்றைக் கருதி மற்றொன்றைக் கேட்க, சிவபெருமான் திருவுளத்தில் முனிவுகொண்டு, "நீ ஜடா முடியாகக் கடவாய்." என்று சபிக்க, அவர் திடுக்கிட்டெழுந்து நின்று, "சுவாமி! நான் கருதிவந்ததைக் கேளாமல் ஊழ்வினைச் சேட்டையால் தவறிப்போனேன். இனி அடியேன் யாது செய்ய வல்லேன்? அச்சோ! இச் சாபம் அடிமைக்கு எக்காலத்தில் விமோசனமாகும்?" என்று, அடி வணங்கிக்கேட்க, சிவபெருமான், "நீ போய்

விருத்தாசலத்தில் மணிமுத்தாநதிக் கரையில் வளர்ந்தோங்கி யிருக்கின்ற அரசமரத்தின் மேலிருந்தாயாகில், இவ்விடம் உன்னோடு தவஞ்செய்தநின்ற எமது அன்பனுகிய ஒருவன் கன்னடதேயத்தில் அரசனுக அவதாரஞ்செய்து, சிறிது நாள் அரசாட்சிசெய்து, பிறகு விரக்தியுண்டாய், பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகளிடத்தில் அநுக்கிரகம் பெற்று, அவர் கட்டளைப்படி விருத்தாசலம் வந்து, நீஇருக்கின்ற அரச மரத்தினிழலில் இருப்பான். அப்போது, நீ அவனைக் கண்டு வணங்கிக் கேட்டால், அவன் சாபவிமோசனஞ் செய்வான்." என்று திருவாய்மலர்ந்தருள, அவர், "சுவாமி! அவர்க்கு முத்திதசை எப்போது?" என்று கேட்க, சிவபெருமான், "அந்த அன்பன் இதற்கு முன்னர், ஐந்து சுத்ததேகமெடுத்து, நம்மை நோக்கி நிஷ்காம தவஞ்செய்திருக்கின்றான். இஃது ஆறுவது தேகம். இன்னும் ஒரு தேகத்தில் முத்தியைப் பெறுவான்." என்று அருளிச்செய்ய, அவர், "பாக்கியம்." என்று சிவபெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு போய், ஜடாமுனியாகி மேற்சொல்லிய அரசமரத்தின் மேலிருந்து, "எப்போது பாபவிமோசன காலம் நேரும்." என்று வழிபார்த்துக் கொண்டிருந்தார்.

குமாரதேவர் சிவபெருமான் திருவருட்படி அருளே திருவுருவாகக் கொண்ட போதினும், ஆசிரியர் வேண்டியிருப்பதால், கன்னட தேயத்திலவதரித்து, சிறிது நாள் அரசுசெய்து, பிறகு துறவு பூண்டு, ஒருநாள் தம்மிடத்துள்ள மந்திரிகளில் முதல் மந்திரியால் தமது சரித்திர முழுதும் பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகளுக்குத் தெரிவித்த பின்பு, தாமே அவ்விடம் போய், மேற்படி சுவாமிகளைக் கண்டு வணங்கி நிற்க, சுவாமிகள், இவர் பரிபாகத்தைச் சோதிக்கும் பொருட்டுத் தம்மிடத்திருக்கும் கையேட்டுத் தம்பிரானைப் பார்த்து, "அப்பா! இவனைப் பார்த்தால் அரசனைப் போலிருக்கின்றானே. இவன் இந்த வழிக்குப் பாத்திரவானல்லன். ஆதலால், இவனை அரசுக்கே போகும்படி சொல்லு." என்று கட்டளையிட்டருள, தம்பிரான், "சுவாமி! இவ்வரசனிடத்தில் அதி தீவிர பக்குவமுடைய நற்சீடருக்குள்ள பதினெண் குறியுமுண்டாயிருக்கிறதே." என்று கைகையாகச் சொல்ல, சுவாமிகள் முன்பே அறிந்திருப்பதால், "ஆனல், இவனை நமது எருதுக்குப் புல்லறுத்துப் போடச் சொல்லு." என்று கட்டளையிட்டருள, தம்பிரான் அரிவாளும், புல்லுகட்டுங் கயிறுங் கொடுத்

தனுப்ப, குமாரதேவர் அத் திருப்பணியைச் சிரசாவகித்துக்கொண்டு, வயலுக்குப் போய்ப் பள்ளர்கள் புல்லை யறுப்பதைப் பார்த்து, தாமும் அவ்வாறே அறுக்க எத்தனித்து, இடக்கையால் புல்லைப் பற்றி வலக் கையிலுள்ள அரிவாளைப் புல்லின்மேல் பூட்டாமல் இடக்கையின் மேற் பூட்டி யிழுக்க, கையறுபட, வலக்கையைப் பார்த்துக் கோபித் தார். இவ் வற்புதக் காட்சியைக் கண்ணாரக் கண்ட பள்ளர்கள் குமார தேவரை நோக்கி, "நீர் யார்? ஐயா!" என்று கேட்க, குமாரதேவர், "நான் பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் வாகனத்திற்குப் புல்லறுப்ப வன்." என்று சொல்ல, பள்ளர்கள் ஆச்சரியமடைந்து, இவர் அரசரைப் போலிருக்கிறாரென் றெண்ணி, அப் பள்ளர்களே புல்லறுத் துக் கட்டுக்கட்டி, அவர் திருமுடிமேல் வைக்க, அச் சுமை பொறாமல் திருமுடி சாய்ந்து போவதைக் கண்ட பள்ளர்கள் அச் சுமையை யெடுத்துக்கொண்டுவந்து, மேற்படி மடாலயத்து வெளியில் வைத்துப் போனார்கள். இவ்வாறு இரண்டு நாள் சென்ற பின்பு, மூன்றாவது நாள் மேற்படி புற்சுமையை யெடுத்துக்கொண்டு வந்த பள்ளன் இவர் சேதி முழுதும் கையேட்டுத் தம்பிரானுக்குத் தெரிவிக்க, அவர் இவர் கையறுப்புண்ட சேதியைச் சுவாமிகளுக்குக் குறிப்பாகத் தெரி வித்தனர். சுவாமிகள் குமாரதேவரைப் பார்த்துச் சோதனை நிமித்தம் முனிவு கொள்பவர்போற் கோபிக்க, அவர் உண்மையாகவே பயந்து, ஒருபுறம் ஒதுங்கி யிருந்துவிட்டார்.

பிறகு, அன்று இராத்திரி சுவாமிகள் கையேட்டுத் தம்பிரானை யழைத்து, "அப்பா! எங்களிருவர்க்கும் வெவ்வேறு கட்டமுது கட்டி, ஒரு தண்டத்தில் மாட்டி, அரசனிடம் கொடுத்து, நம்மோடு கூட அனுப்பிவை." என்று கட்டளையிட்டருள, அவர் அவ்வாறே செய்தனுப்பிவைக்க, சுவாமிகள் முன்னும் குமாரதேவர் பின்னுமாய்ப் போகையில், சிறிதுதூரம் போய்ச் சுவாமிகள் இவரைத் திரும்பிப் பார்த்து, "என்ன தாமதம்?" என்றதட்ட, இவர் பயந்து, "சுவாமி! ஒரு புறம் அச்சுலிங்கம், மற்றொரு புறம் கனயத்தம் இழுக்கின்றதே." என்று சொல்ல, சுவாமிகள் அக் குறிப்பை யறிந்து தமக்குத் தாமே ஆநந்த பரவசமடைந்து பிறகு, அவ்விடத் திலுள்ள ஒரு குளக்கரை மேலிறங்கி, இருவரும் ஒன்றாக உட் கார்ந்து, இரண்டன்னத்தையும் ஒன்றாகச் சேர்த்து, குமாரதேவர் சுவாமிகளுக்கு அதனைப் பரிமாற, சுவாமிகள் நைவேத்தியங் கொண்ட

பின்பு,சேடமான மகாப்பிரசாதத்தைத் தாமும் உட்கொண்டு, சிறிது நேரம் அவ்விடம் இருவரும் சிற்சில விஷயங்களை வசனித்துக் கொண்டிருந்த பிறகு, மடாலயத்திற்கு வந்து சேர்ந்து, சிலநாள் கழித்து, சுவாமிகளிடம் அநுக்கிரகம் பெற்றுக்கொண்டு, சாதனை செய்து முதிர்ந்த காலத்தில், ஒருநாள் சாந்தலிங்க சுவாமிகள் இவரை மகாராஜா வென்று பெயரிட்டழைத்து, "அப்பா! நீ விருத்தாசலத் திற்குப் போகவேண்டும்." என்று கட்டளையிட்டருள, குமாரதேவர், "அங்ஙனே நல்லது." என்று விடைபெற்றுக் கொண்டு, விருத்தா சலத்தை நோக்கி வருகிற வழியில் சின்ன சேலத்துக்குக் கீழ்ப்புற மான காட்டில் இவர் நிமித்தம் அன்புகூர்ந்து, பழமலை நாதரே ஒரு ஜங்கம மூர்த்தியாக வெழுந்தருளிவந்து, தண்ணீர்ப் பந்தல் வைத்துக் கொண்டிருந்து, இவரைக் கண்டு, "அப்பா! நீ ஆயாசமாய்ப் போகிற படியால் நால்வகை ஜலமுமிருக்கின்றன; உனக்கு வேண்டிய மட் டும் சாப்பிட்டு, விடாய் தீர்க்கலாம்." என்று உபசரித்து, தண்ணீர் கொடுக்க, குமாரதேவர் அதைச் சாப்பிட்டு, தாகநிவர்த்தி செய்து கொண்டு, விருத்தாசலம் வந்து சேர்ந்து, மணிமுத்தாநதிக் கரையி லிருக்கின்ற அரசமரத்து நீழலில் நடந்துவந்த ஆயாசத்தினால், சற்று இளைப்பாறச் சயனித்து, பிரமாநந்த நித்திரையிலெழுந்தருளி யிருந்த னர். அதனைப் பெரிய நாயகியார் அறிந்து தமது அபிடேகத்துக்குச் சுவர்ண பாத்திரத்தில் வைத்திருந்த பசும்பாலை எந்திக்கொண்டு, ஒரு ஜங்கம ஸ்த்ரீயைப்போல, அங்கு இவரிடம் வந்து, தலைப் பக்கத்திலுட்கார்ந்து, தமது திருமடியின்மேல் இவர் திருமுடியைத் தூக்கி வைத்து, அந்தப் பாலைப் புகட்டின பின்பு, இவர் ஆயாசந் தீர்ந்து, கண்ணை விழித்துப் பார்த்து, "நீர் யார்? அம்மா!" என்று கேட்க, பெரியநாயகியார், "குமாரதேவா! நான்தான் பெரிய நாயகி. நீ எப்போதும் எம்மிடத்தில் தானே சுகமாயிரு." என்று திருவாய் மலர்ந்தருளி, உடனே மறைந்தனர். குமாரதேவர், "அம்மா! உமது கிருபைக்கு அடிமை யாது கைம்மாறு செய்ய வல்லேன்?" என்று பலவாறு தோத்திரஞ் செய்து, அங்ஙனே பரவசமாயிருந்தார்.

இவரைக் கண்டு மேற்படி ஜடாமுனி தேடியிருந்த பொருள் கிட்டிற் றென மகிழ்ந்து, அம் மரத்தை விட்டுக் கீழே யிறங்கிப் பிராமண வுரு வாய் வந்து, அதி விநயத்துடன் அடிவணங்கி நிற்க, குமாரதேவர் ஜடா முனியைப் பார்த்து, "நீ யார்? அப்பா!" என்று கேட்க, அது,

"நான்தான் ஜடாமுனி." என்று சொல்ல, குமாரதேவர், "நீ இவ் விடத்திற்கு வந்த காரியம் என்ன?" என்று கேட்க, ஜடாமுனி தனதுசரித்திர முழுதும் விவரமாகச் சொல்ல, குமாரதேவர் சந் தோஷமாய் ஜடாமுனிக்குச் சாபநிவர்த்திசெய்து, சிறிது நாள் அவ் விடத்தில் தானே கரபாத்திரஞ் செய்து கொண்டிருந்தார்.

அவ்விடத்தில் ஒரு குடும்பியானவன் இவரை மகானென்றறிந்து நாள்தோறும் உண்மையாய்த் தரிசனஞ்செய்து வர, அவனுக்கு நாளுக்கு நாள் சகல சம்பத்தும் அபிவிருத்தி யடைந்து வருகையில், ஒரு நாள் அவன் குமாரதேவரைக் கண்டு வணங்கி, "சுவாமி! அடியேனுக்கு ஏதேனும் ஒரு திருப்பணி கட்டளையிட்டருள வேண்டும்." என்று வருந்திக் கேட்க, குமாரதேவர், "அப்பா! அப்படி உனக்கிஷ்டமா யிருந்தால், பெரிய நாயகியார் சந்நி தானத்திற் கெதிராக ஒரு மண்டபம் கட்டிவை." என்று கட்டளையிட்டருள, அவன், "அப்படியே மகாபாக்கியம்." என்று மண்டபங்கட்டுவிக்க எத்தனித்துக் கட்டும்போது, உத்திரக்கல் மேலேறாமல் வருத்தமடைந்து, குமாரதேவர்க்குச் சங்கதியைத் தெரி விக்க, அவர் விபூதியைக் கொடுத்து, "இதை அந்தக் கல்லின்பேரில் போட்டுத் தூக்கச் செய்." என்று உத்தரவு செய்தருள, அப்படியே செய்து முடிந்தபின்பு, அந்தக் குடும்பி சந்தோஷ சித்தனாய்க் குமார தேவரை வணங்கி நின்று, "சுவாமி! தேவரீருடைய பிரபாவத்தை யின்னதென்று அளவிட்டுச் சொல்ல யாராலாகும்?" என்று நானாவித மாகத் தோத்திரஞ் செய்ய, குமாரதேவர் அவனை யழைத்துக்கொண்டு போய்க் கோபுர வாயிலிற் செய்துவைத்திருக்கும் இரண்டு துவார பாலகருடைய முதுகும் உரைபட்டிருப்பதை அவனுக்குக் காண்பித்து, "அப்பா! இவர்களுக்குத் தவனகஞ்சி காய்ச்சி நைவேத்தியம் பண்ணு." என்று கட்டளையிட்டருள, அவன், "மகாபாக்கியம்." என்று அப்படியே செய்வித்துக் கிருத கிருத்தியனானான்.

பிறகு, ஒரு நாள் குமாரதேவர் ஒரு குடும்பி வீட்டு வாயிலிற் சென்று பிக்ஷைக்குக் கையேந்த, அவர்கள் இவர் மகிமையை யறி யாதவர்களாய்த் தங்கள் வீட்டில் சமைத்து வைத்திருந்த மச்சத்தை அன்னத்தோடு கலந்து, இவர் கையிற் பரிமாற, அது தெரிந்து குமார தேவர் அங்ஙனே குளத்தினீருகிற் செல்ல, அந்த மச்சம் உயிர் பெற்று குளத்திற் குதித்தோடிப் போய்விட்டது.

இப்படியிருக்க, ஒரு குஷ்டரோகி தனது தேக வருத்தம் நீங்க வேண்டுமென்று, நாள்தோறும் இடைவிடாமல் குமாரதேவரைக் கண்டு தரிசனஞ் செய்து வருகையில், ஒரு நாள் அதிக வாதனையினுற் சகிக்கமாட்டாதவனுய்க் குமாரதேவரிடம் வந்து, அவர் திருவடியில் விழுந்து, கோ வென்று அலறி முறையிட, குமாரதேவர், "அப்பா! நாம் வைத்தியனல்லோம்." என்று கூற, அவன், "சுவாமி! தேவரீர் திருக்கையினுல் விபூதியையாகிலும் கொடுத்தால், எனது ரோகம் நிவர்த்தியாகும்." என்றிரங்கிக் கேட்க, குமாரதேவர் திருவுளமிரங்கி, விபூதியை யள்ளி அவன் இடக்கையில் வைத்து வலக்கையினுல் மூடிக்கொள்ளச் சொல்லிப் பழமலைநாதர் சந்நிதானத்தினுள் ஒரு மாடத்திலிருக்கும் விக்கினேஸ்வரரைக் குறியாகக் காண்பித்து, "அப்பா! நீ அந்த விக்கினேஸ்வரர் முன்னே போய், இரண்டு கண்களை மூடிக்கொண்டு நின்று, அங்கே நடக்கின்ற அதிசயத்தை நமக்கு வந்து சொல்லு." என்று கட்டளையிட்டருள, அவன் அப்படியே போய் நிற்க, அவனுக்குச் சுழுத்திபோற்ரோன்ற, அத் தருணத்தில், அந்த விநாயகக் கடவுள் தமது திதிக்கையை நீட்டி, இவன் இடக் கையிலிருந்த விபூதியைத் தொட்டது போலக் கண்டு விழித்து, குமார தேவரிடத்திற்கு வந்து, விண்ணப்பஞ் செய்ய, குமாரதேவர் ஆநந்த மாய் அந்த விபூதியைத் தொட்டுத் தரித்துக்கொண்டு, அவனையும் அதனைத் தரித்துக் கொள்ளும்படி உத்தரவு செய்தருள, அவன் அப்படியே தரித்துவருங் காலையில், அவன் குஷ்டரோகம் நிவர்த்தி யாகிச் சவுக்கிய மடைந்தான்.

இவ்வாறிருக்கையில், ஒருநாள் குமாரதேவர் திருவாரூர் பிரஹ் மோத்ஸவத்துக்குப் போயிருந்தபோது இரதோத்ஸவ தினம் தியாக ராஜப் பெருமான் இரதமேறி மாடவீதி திருக்கோலம் வருகையில், அந்த இரதத்திற்கு நேரே குமாரதேவர் தரிசனஞ் செய்வதை இரண்டு போலிச் சைவர்கள் கண்டு, ஒருவருக்கொருவர் விகடமாய் வீரசைவ மருளைப் பார்த்தீர்களோ வென்று பேசிக்கொள்ள, அந்த விகட வார்த்தையைக் குமாரதேவர் கேட்டு, இரதத்தில் வரும் தியாகராஜப் பெருமானைப் பார்த்து, "தியாகராஜப் பெருமானே! வீரசைவம் மரு ளானுல் இரதம் நடக்க. அருளானுல் இரதம் நிற்க." என்று திருவாய் மலர்ந்தருள, இரதம் உடனே நின்றுவிட்டது. பிறகு, குமாரதேவர் கொஞ்ச தூரத்திருந்த ஒரு மாநிழலிலுட் கார்ந்திருந்தார். இரதம்

நின்று விட்ட சேதி தெரிந்த தர்மகர்த்தாவாகிய தஞ்சாவூர் அரசன் இரதம் தன்நிலை வந்துசேர்ந்த பிறகு, போஜனஞ் செய்கிற தென்னும் விரதமுடையவனாதலால், அடியேன் என்ன செய்யவல்லே னென்றச்சமுற்று, இவ்விடத்தில் நடந்த இரகசியந் தெரியாதபடியினால், சாயங்கால பரியந்தம் அந்த இரதம் நடக்கும்படி அனேக பிரயத்தினங்கள் செய்வித்தும், அது சற்றேனும் அசையாது நிற்பதைப் பார்த்து, " இனி என்ன செய்யக் கூடும்? இது யாராலுற்ற இடறு? அந்தோ! வீணில் என் விரதம் தவறுகின்றதே. எம்பெருமானே!" என்று விசன முற்று, மெய் சோர்ந்து வாடி பிறகு, தேறியிருக்குங் காலையில், அரசன் அவ்விடத்தில் நடந்தஇரகசியத்தைக்கேள்விப்பட்டு, குமாரதேவர் இருக்குமிடத்துக்கு வந்து, அவரைக் கண்டு அடி வணங்கி, விண்ணப்பஞ் செய்ய, குமாரதேவர் அரசனைப் பார்த்து, "ஐயா! இம்மருளனிடத்தில் உங்களுக்கு என்ன அலுவல்? போங்கள்." என்று சொல்ல, அரசன், "சுவாமி! இந்தப் பிழையை மன்னித்து, இரதத்தை நடப்பித்தருள வேண்டும்." என்று வெகுவாகத் தோத்திரஞ் செய்ய, குமாரதேவர் திருவுள மிரங்கி அந்த அரசனுடனுஞ் சேனைகளுடனும் எழுந்தருளி வந்து, இரதத்தின் முன்னே நின்று, தியாகராஜப் பெருமானைப் பார்த்து, "எமது தயாநிதியே! வீரசைவம் அருளானால் இரதம் நடக்க. மருளானால் நிற்க." என்று திருவாய் மலர்ந்தருள இரதம் சடுதியில் நடந்து, யாவருங் களிக்கத் தன் நிலையிற் போய் நின்றது.

இப்பால், குமாரதேவர் மறுபடியும் விருத்தாசலம் வந்து, அவ் வரசமரத்தின்கீழ் வாசம் பண்ணிக்கொண்டிருக்குங் காலையில், பிற தேசத்திலுள்ள ஒரு மாந்திரீகன் விருத்தாசலத்திலுள்ள பத்திரகாளியைத் தன்கைவசமாக்கிக் கொள்ள எண்ணினவனாய்த் தனது நாட்டை விட்டு, மணிமுத்தா நதிக்கு வடதிசையாக வருகையில், பத்திரகாளி சங்கதியை யறிந்து அச்சமுற்றவளாய், ஒரு ஸ்திரீயைப்போலக் குமார தேவரிடத்திற்கு வந்து, அவரைப் பிரதக்ஷிண நமஸ்காரம் பண்ணி, அவர்க்கெதிரே நிற்க, அது கண்டு குமாரதேவர், "நீ யார்? அம்மா!" என்று கேட்க, பத்திரகாளி, " சுவாமி! நான்தான் பத்திரகாளி. என்னைத் தன்வசஞ் செய்து கொள்ளும்படி ஒரு சண்டாளன் வருகிறான். அதனால் பயந்து உம்மிடம் வந்தேன்." என்று விண்ணப்பஞ் செய்ய, குமாரதேவர், " எம்மால் உனக்காக வேண்டியது என்ன? "

என்று கேட்க, பத்திரகாளி, "சுவாமி! தேவரீர் திருவடிகளை அடியாள் சிரசின் மேல் வைத்தால், என் ஆபத்து நீங்கும்." என்று விண்ணப்பஞ் செய்ய, குமாரதேவர் திருவுள மிரங்கி, "அங்ஙனே நல்லது." என்று, பத்திரகாளி சந்நிதிக் கெழுந்தருளி வந்து, அந்த விக்கிரகத்தின் முடியின்மேல் தமது திருவடியைத் தூக்கி வைக்க, அந்த மாந்திரீகனுடைய இரண்டுகண்களும், அவன் மனவிருள் போலவே, இருளடைந்தன. அது தெரிந்து மாந்திரீகன் பயங்கொண்டு, இந்தத் தலத்தில் பெரியோர்கள் வாசஞ் செய்கின்றனர்போலு மென்றெண்ணி, அவ்விடத்தில் விசாரிக்க, குமாரதேவர் எழுந்தருளி யிருப்பதைக் கேள்விப்பட்டு, அவர் இருக்குமிடந் தேடிவந்து, அவரைக் கண்டு வணங்கி நிற்க, குமாரதேவர் அவனைப் பார்த்து, "நீ யார்? அப்பா!" என்று கேட்க, மாந்திரீகன், "சுவாமி! நான் மாந்திரீகன். இவ்விடத்திற்கு இந்த உத்தேசமாய் வந்த இடத்தில் எனக்கு இவ்வகையான ஆபத்து நேரிட்டது. இதைத் தேவரீரே தீர்த்தருள வேண்டும்." என்று வெகுவாகத் தோத்திரஞ் செய்து நிற்க, குமாரதேவர் சற்றுத் திருவுள மிரங்கி, "அடே, நீ உன் சரீரமுள்ளவரையிலும் இந்த மாந்திரீகத்தை விட்டிருப்பாயாகில், உனக்கு ஒரு கண் மாத்திரந் தெரிய அநுக்கிரகஞ் செய்வோம்." என்று சொல்லியருள, மாந்திரீகன், "சுவாமி! அப்படியே நல்லது." என்று குமாரதேவர் திருவடியைத் தொட்டுச் சொல்ல, அவனுக்கு ஒரு கண் தெரிந்தது. பிறகு, அவன் தன்னுடைய தேசத்துக்குப் போனான்.

இப்பால், ஒரு குடும்பியானவன் புத்திராபேக்ஷையினால் ஸ்திரீயுந் தானும் நெடுநாளாய் வியசனப்பட்டுக் கொண்டு, குமாரதேவரைக் கண்டு, நாள்தோறும் தரிசனம் பண்ணி வருகையில், ஒரு நாள் குமாரதேவர் திருவுளமிரங்கி, அந்தக் குடும்பிக்கு விபூதி யளிக்க, அவ் விபூதிப் பிரசாதத்தால் அவர்களுக்கு இரண்டு ஆண் பிள்ளைகள் பிறந்து, அவர்கள் வளர்ந்து, ஐந்து வயதாகிப் பாடசாலையில் வைத்து வித்தியாப்பியாசஞ் செய்வித்த பிறகு, அந்தப் பிள்ளைகளுக்கு இலக்கணப் பியாசஞ் செய்விக்க வேண்டி, இலக்கண வித்துவானாகிய சிதம்பரம்பிள்ளை யென்பவரை மதுரையிலிருந்து வரவழைத்து, அவ் விரண்டு பிள்ளைகளுக்கும் இலக்கணப்பியாசஞ் செய்வித்து வருங்காலத்தில், ஒரு நாள் குமாரதேவர் குக்ஷி பாதை நிமித்தம் அந்தக் குடும்பி வீட்டிற்கு வருகையில், அந்தச் சிதம்பரம் பிள்ளை யென்னும் உபாத்தியாயர் இவரிடத்தில் மதிப்பற்று, இறுமாந்திருப்பதைக்

கண்டு, அவரைத் தடுத் தாட்கொள்ளத் திருவுளங் கொண்டு, அவரை நோக்கி, ஒரு வாக்கியத்தைக் கூறி, அதற்குப் பயன் கேட்க, அவருக் கென்ன வித்துவசாமர்த்திய மிருந்த போதிலும், இந்தச் சந்நிதானத் தில் நாவெழாமையால், பயன் கூருது, மயங்கி நின்று, சற்றுத் தெளி வுண்டாகி, குமாரதேவர் திருவடியில் விழுந்து வணங்கி, "சுவாமி! அடிமையை மன்னித்து, இரக்ஷித்தருளவேண்டும்." என்று விண்ணப் பஞ்செய்து, அது முதல் துறவு பூண்டு, குமாரதேவரது பின்னுகச் சாயை போற்ருெடர்ந்து, தானும் கர பாத்திரம் பண்ணிக் கொண்டி ருந்தார். அவர் அருமையையும் மெய்யன்பையும் குமாரதேவர் அறிந்து, அவரைத் தமது ஆசிரியரிருக்கும் பேரூர்க்கு அழைத்துக் கொண்டு நடந்து, மடாலயத்திற்குச் சமீபமாகப் போகையில் விடியற் காலையாகையினுல், எழுந்திருந்து வெளியே வந்து நிற்கிற தம்பிரானைக் கண்டு, "சுவாமிகளுக்குச் சமய மெப்படி?" என்று கேட்க, தம்பிரான், "ஐயா! சுவாமிகள் பரம நிஷ்டையிலெழுந்தருளி யிருக்கின்றது." என்று கூற, குமாரதேவர், "ஆனுல், நாம் பணிசெய் வோம்." என்று நினைத்து, சாணச்சட்டி யெடுத்துக் கொண்டு திரு மெழுகிட, சிதம்பரசுவாமிகள் திருவல கெடுத்துக் கொண்டு திரு வல கிட்டார். இத் திருப்பணி முடிந்த பின்பு, சுவாமிகள் திருக் கண் விழித் தருளிய சேதி தெரிந்து, இவ் விருவரும் மடாலயத்துட் சென்று, சுவாமிகளைக் கண்டு வணங்கி நிற்க, சுவாமிகள் குமார தேவரைப் பார்த்து, "அப்பா! உன்னை யடுத்து நிற்கின்றவன் யார்? என்று கேட்க, குமாரதேவர், "சுவாமி! இவன் தென்னுட்டுச் சைவன்." என்று சொல்ல, சுவாமிகள், "இவனை ஏன் இங்கு அழைத்துக் கொண்டு வந்தாய்?" என்று கேட்க, குமாரதேவர் மௌனமாயிருந்து விட்டார். இப்படி இரண்டு தினம் சென்றபின்பு, சிதம்பர சுவாமிகள் நடையைக் கையேட்டுத் தம்பிரான் அறிந்து, சுவாமிகளை வணங்கி நின்று, "சுவாமி! இந்தச் சைவன் மிகுந்த வல்லவனுயிருக்கிறபடி யால், இவனைத் திருவடிக்கு ஆளாக்கிக் கொள்ளவேண்டும்." என்று விண்ணப்பஞ் செய்ய, சுவாமிகள் தம்பிரானைப் பார்த்து, "அப்பா! நமக்கிருக்கிற சந்ததி போதும். நமது சந்ததிக்குச் சந்ததி நெடு நாளில்லாமலிருந்து, இப்போது கிடைத்தபடியால், அப்படியே செய் விக்க வேண்டும்." என்று கட்டளையிட்டருள, அதற்குத் தம்பி ரான் மௌனமாயிருந்து விட்டார். இப்படி இரண்டு நாள் கழிந்த பின்பு, மூன்ருவது நாள் சுவாமிகள் குமாரதேவரை யழைத்து,

“ அப்பா! நீ உன் இருப்பிடம் போ.” என்று சொல்லியருள, குமார தேவர், “ சுவாமி! இவன் இவ்விடத்தில் இருக்கட்டும்.” என்று விண்ணப்பஞ்செய்ய, சுவாமிகள், “ அப்பா! இவன் இவ்விடத்தில் வேண்டாம். இவனை நீயே அழைத்துக் கொண்டு போ.” என்று சொல்லியருள, குமாரதேவர், “ சுவாமி! இவனைக் கொண்டு போய் அடிமை என்ன செய்கிறது?” என்று கேட்க, சுவாமிகள் குமாரதேவரைப் பார்த்து, “ அப்பா! நீ இவனைக் கொண்டு போய்ப் பக்குவ மறிந்து உனக்குச் சொன்னதை இவனுக்குச் சொல்லிவை.” என்று கட்டளையிட்டருள, குமாரதேவர், “ மகாப்பிரசாதம்.” என்று விடை பெற்றுக் கொண்டு, இருவரும் விருத்தாசலம் வந்து சேர்ந்து பிறகு, சிதம்பர சுவாமிகள் பக்குவஞ் சோதித்து அவர் அநுக்கிரகஞ் செய்தருளினார். இவர்தான் திருப்போரூர்ச் சந்நிதானம் விளக்கிய சிதம்பரசுவாமிகள்.

இப்படி நடந்து வருங்காலத்தில், பெரியநாயகியார் குமாரதேவரால் சாஸ்திரஞ் செய்விக்கும்படி திருவுளங்கொண்டு, குமாரதேவர் பாலில் வந்து, “ அப்பா! குமாரதேவா! நீ சாஸ்திரஞ் சொல்ல வேண்டும்.” என்று திருவாய் மலர்ந்தருள, குமாரதேவர், “ அம்மா! அடிமையாற் சாஸ்திரஞ் சொல்ல முடியாது.” என்று விண்ணப்பஞ் செய்ய, பெரிய நாயகியார், “ ஆனால், நாமே உனது நாவில் நின்று சொல்லி முடிக்கிறோம்.” என்று அநுக்கிரகிக்க, குமாரதேவர், அங்ஙனே மகாராஜா துறவு முதல் பதினாறு சாஸ்திரங்களைச் சொல்லி முடித்தருளினார். இப்படி அநந்த மகத்துவங்களைச் செய்து அந்தத்தில் குமாரதேவர் ஸ்வரூப ஸாக்ஷாத்கார பரிபூர்ண தசையை யடையுஞ் சமய மறிந்து, இரண்டாவது அடிமையாகிய ரெட்டி - சிதம்பர சுவாமிகள் குமாரதேவரைப் பார்த்து, ‘ சுவாமி! தேவரீர் பரிபூரணமான பின்பு, அடியார்கள் தரிசனஞ் செய்யும் பொருட்டு ஒரு திருப்பணி கட்டளையிட்டருள வேண்டும்” என்று விண்ணப்பஞ் செய்ய, குமாரதேவர், “ நாம் மறைந்தும் நமது பெயர் இருக்கவேண்டுமோ?” என்று கூறி, அகண்ட பரிபூரண ஸாக்ஷாத்கார ஸ்வரூப வியாபகத்திற் கலந்தருளினார். இப்பால், ரெட்டி - சிதம்பர சுவாமிகள் பெரியநாயகியார் கட்டளைப்படி குமாரதேவர் திருநாமத்தினால் கோயில் மடாலய முதலியவற்றைக் கட்டுவித்துப் பிறகு, தாமும் பரிபூரண தசையை யடைந்தார்.

ஸ்ரீ குமாரதேவர் சரித்திரச் சுருக்கம் முற்றிற்று.

Penrose & Co., Printers 19, Sunkurama Chetty Street, G.T., Madras.

உ

சிவமயம்

# ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள்

# அபிஷேகமாலை

பாயிரம்

## விநாயகர் துதி

### நேரிசை வெண்பா

பாவாணர் போற்றும் பழமலைவா ழுங்குமர
தேவா சிரியன் றிருவடிக்கென்—நாவாரச்
சூட்டுந் தமிழலங்கற் சொற்பொருண் மாறாதுணின்று
காட்டும்பா தாளக் கயம்.

(இதன் பொருள்) பாவாணர் போற்றும் - கவிவாணர் பரவுகின்ற, பழமலை - விருத்தசாலமென்னும் பதியில், வாழும் - எழுந்தருளியிராநின்ற, குமர தேவாசிரியன் - குமாரதேவ சுவாமிகள் என்னும் பரமாசாரியாரது, திருவடிக்கு - சிறந்த பாதங்களில், என் நா ஆர - எனது நாக்கு திருப்தி யடையும்படி, சூட்டும் - பாடியணிகின்ற, தமிழ் அலங்கல் - தமிழ்ப் பாமாலையாகிய அபிஷேகமாலை யென்னும் இந் நூலில், சொல் பொருள் - உயர்ந்த சொற்களும் பொருள்களும், மாறாது - தவிராது நிற்கும்படி, உள்நின்று - என் மனத்தின் கண் எழுந்தருளியிருந்து, பாதாளக் கயம் - பாதாளக் கணபதி என்னும் விநாயகப் பெருமான்*, காட்டும் - எனக்குத் தெரிவித் தருள்செய்வார் (என்றவாறு.)

## நூல்.

[இச் செய்யுள் என்னுதலிற்றோ? எனின், ஆசாரியர் அபிஷேகங் கூறிய முகத்தானே பதியிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.]

---

*ஆழத்துப் பிள்ளையார்.

## பதினன்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தெருள்வளரு மலரின்மண மெனவபின மாய்நிலவு
சிற்சத்தி முதல றுவர்பாற்
செனிதசாந் தியாதீத வுத்ரகலை முதலாறிற்
செறிமகச தாக்யர் முதலாய்
வருவரறு தத்துவர்கள் சிவமாதி யாமூர்த்தி
வதிவரறு வர்களி வர்கடா
மன்னும்பிர பாவமதி லீசான மாதியாய்
மருவுமறு வதனம் விந்து
பொருவரிய பீடமாய்க் கொண்டிலிங் கமதாய்ப்
பொலிகன்ம சாதா க்யரே
புகல்சிருட்டி யாதியைந் தொழினடத் துவரிவரில்
போந்தனவை யைந்து மூர்த்த
மருளினிவை முத்தனு வெனக்கொண்டு நிகழ்பாம
வபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமாசற் குருபாக
லபிடேக மாடி யருளே.

(இதன்பொருள்) தெருள் வளரும் - தெளிவு வளராநின்ற, மலரில் - புட்பத்தினிடத்து, மணமென - வாசனைபோல, அபினமாய் - அபின்னமாகி, நிலவு - பிரகாசியாநின்ற, சிற்சத்திமுதல் - சிற்சத்தி முதலிய, அறுவர்பால் - ஆறு சத்திகளினிடத்தும், செனிதம் - உண்டாகிய, சாந்தியாதீதவுத்ரகலை முதல் - சாந்தியாதீதோத்ரகலை முதலிய, ஆறில் - ஆறினிடத்தும், செறி - பொருந்திய, மகசதாக்யர் முதலாய் - மகாசாதாக்கியர் முதலாக, அறு - ஆறுவிதமாகிய, தத்துவர்கள் - தத்துவரென்று சொல்லப்பட்டவர்கள், வருவர் - உண்டாகுவர், சிவமாதியாம் - சிவமுதலாகிய, அறுவர்கள் - ஆறுபேர் களும், மூர்த்திவதிவர் - தத்துவமூர்த்திகளாகப் பொருந்துவார்கள், இவர்கள் தாம் - இத் தத்துவருந் தத்துவமூர்த்திகளும், மன்னும் - நிலை பெற்ற, பிரபாவமதில் - பிரபாவத்தில், ஈசானமாதியாய் - ஈசான முதலிய, அறுவதனம் - ஆறுவதனங்களும், மருவும் - பொருந்தும், விந்து - விந்து சத்தியை, பொருவரிய - ஒப்பற்ற, பீடமாய்க்கொண்டு

பீட மாகக் கொண்டு, இலிங்கமதாய் - இலிங்கரூபமாகி. பொலி - விளங்கா நின்ற, கன்மசாதாக்யரே - கன்மசாதாக்யரென்பவரே, புகல் - சொல்லப்பட்ட, சிருட்டியாதி - சிருட்டிமுதலிய, ஐந்தொழில் - பஞ்ச கிருத்தியங்களையும், நடத்துவர் - நடத்துவார், இவரில் - இவரிடத்தினின்று, போந்தன - உண்டாயின, ஐயைந்து மூர்த்தம் - இருபத்தைந்து மூர்த்தங்களாம், அருளின் - கிருபையினால், இவை - இவைகளையெல்லாம், மூத்தனுவெனக்கொண்டு - மூன்று தேகங் களாகக் கொண்டு, நிகழ் - விளங்காநின்ற, பரம - மேலானவனே, அமல - நிருமலனே, முதுகிரியினமர் - விருத்தாசலத்தி லெழுந் தருளிய, குமா சற்குருபா - குமாரதேவனென்னுந் திருநாமத்தினை யுடைய பரமாசிரியனே, நல் அபிடேக மாடியருளே - அடியேங்கள் செய்யும் நல்ல அபிஷேகத்தைத் திருவுளங்கொண்டருள வேண்டும் (என்றவாறு.)

(பதசாரம்.) மலரு மணமும்போற் சிவத்தை விட்டு நீங்காது, அபின்னமாய் விளங்குஞ் சாந்தியாதீதோத்ரை யென்னுங் கலா ரூப மான சிற்சத்தி. இதில் ஆயிரத்திலோ ரங்கிசமானது சாந்தியாதீத கலாரூபமாகிய பராசத்தி. இதில் ஆயிரத்திலோரங்கிசமானது சாந்தி கலாரூபமாகிய ஆதிசத்தி. இதில் ஆயிரத்திலோரங்கிசமானது வித்யா கலாரூபமாகிய இச்சாசத்தி. இதில் ஆயிரத்திலோரங்கிசமானது பிர திஷ்டா கலாரூபமாகிய ஞானசத்தி. இதில் ஆயிரத்திலோரங்கிச மானது நிவிர்த்திகலாரூபமாகிய கிரியாசத்தி. இங்ஙனஞ் சொல்லிய சிற்சத்தியிற்பத்திலொரு கூறு வலியை யுடையது மகா சாதாக்கியம். பராசத்தியிற் பத்திலொரு கூறு வலியை யுடையது சிவசாதாக்கியம். ஆதிசத்தியிற் பத்திலொரு கூறு வலியை யுடையது அமூர்த்தி சாதாக்கியம். இச்சாசத்தியிற் பத்திலொரு கூறு வலியை யுடையது மூர்த்திசாதாக்கியம். ஞானசத்தியிற் பத்திலொரு கூறு வலியை யுடையது கத்துருசாதாக்கியம். கிரியாசத்தியிற் பத்திலொரு கூறு வலியை யுடையது கன்மசாதாக்கியம். இச் சாதாக்கியர் அறுவருக் குந் தத்துவரென்று பெயர்.

இனித் தத்துவமூர்த்திகளெவர்? எனின், சிவமூர்த்தி, சதாசிவ மூர்த்தி, ஈசமூர்த்தி, பிரமீசமூர்த்தி, ஈசுரமூர்த்தி, ஈசானமூர்த்தி ஆகத் தத்துவமூர்த்திகளறுவர். இவர்கள் பிரபாவ லக்ஷணமேதெ

னின், மகாசாதாக்கியரென்னுந் தத்துவமும் சிவமென்னு மூர்த்தியும் பொருந்தியது அதோமுகம். சிவசாதாக்கியரென்னுந் தத்துவமும் சதாசிவமூர்த்தியும் பொருந்தியது ஈசானமுகம். அமூர்த்திசாதாக்கியரென்னுந் தத்துவமும் ஈசமூர்த்தியும் பொருந்தியது சத்தியோசாதமுகம். மூர்த்திசாதாக்கியரென்னுந் தத்துவமும் பிரமீசனென்னு மூர்த்தியும் பொருந்தியது வாமதேவமுகம். கத்துருசாதாக்கியரென்னுந் தத்துவமும் ஈசுரமூர்த்தியும் பொருந்தியது அகோரமுகம். கன்மசாதாக்கியரென்னுந் தத்துவமும் ஈசானமூர்த்தியும் பொருந்தியது தற்புருடமுகம். ஆதலால், "தெருள்வளருமலரின் மணமெனவினமாய் நிலவு சிற்சத்தி முதலறுவர்பாற் செனித சாந்தியாதீத வுத்தகலைமுதலாறிற் செறிமகசதாக்யர் முதலாய் வருவாறுதத்துவர்கள் சிவமாதியாமூர்த்தி வதிவாறுவர்களிவர்கடா மன்னும் பிரபாவமதிலீசானமாதியாய் மருவு மறுவதனம்" என்றது. விந்துமயமாகிய கிரியாபீடமும் நாதமயமாகிய ஞானலிங்கமும் ஆகிய கன்மசாதாக்கியரே சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்னுங் கிருத்தியங்களை நடத்துவோர். இவரிடத்துத் துஷ்ட நிக்ரகஞ் சிஷ்ட பரிபாலனஞ் செய்யுநிமித்தஞ் சந்திர சேகரமுதலிய விருபத்தைந்து மூர்த்தங்களுமுண்டாயின. அவை யாவை யெனின்,

பதினன்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

"சந்திரசே கருமாம கேசரிட பாரூடர்
சபாபதிகல் யாண சுந்த்ரர்
சாற்றுபிச் சாடனர்கா மாரிசய வந்தகாரி
திரிபுர தகன ரோடு
சிந்தைசெய் சலந்திராரி விதிதும்சர் வீரபத்
திரநார சிமசி பாதர்
திகழர்த்த நாரிசர் விக்ரதர கங்காளர்
சீர்ச்சண்டி கேசா னுக்ரகர்
நந்தலில் கறைக்கண்டர் சக்ராப யப்பிரதர்
நவில்கசமு கானு க்ரகர்
நவையில்சோ மாஸ்கந்த ரேகநவில் பாதாரு
ணனுதக்ஷி ணாமூர்த் தியே

பந்தமி லனங்கசுக ப்ரத்துமர் லிங்கோற்பவர்
பகரிருப தோடை வரும்
பரவுதுட் டர்கள்சிட்ட நிக்ரகவ னுக்ரகம்
பணுமிறைகொண் மூர்த்த மிவையே."

ஆதலால், "விந்துபொருவரிய பீடமாய்க்கொண்டிலிங்கமதாய்ப் பொலிகன்மசாதாக்கியரே புகல்சிருட்டியாதியைந் தொழினடத்து வரிவரில் போந்தனவை யைந்துமூர்த்தம்" என்றது. இங்ஙனங் கூறிய இலிங்கோற்பவமான இருபத்தைந்து மூர்த்திகளையும் தூலத் திருமேனியாகவும், சாதாக்கியாறுவரையும் சூக்குமத் திரு மேனியாகவும், கலாரூபமான சத்திகளறுவரையும் காரணத் திரு மேனியாகவுங் கொண்டு விளங்குகின்றவர் பசுபதியாகிய சிவபெரு மான். ஆதலால், "அருளினிவை முத்தனுவெனக் கொண்டு நிகழ் பரம" என்றது.

(விசேட வுரை.) மகாசாதாக்கியர் அதோமுகம் ஆதலானும், அதிலறிதுயில் கொண்டிருப்பது ஆதலானும், அம் முகத்திற் பூசாங்கீகாரமின்று ஆதலானும், அவரது இலக்கணம் விவரித்திலம். சிவசாதாக்கியரது தன்மை எங்ஙனமிருக்குமெனின், சாந்தியாதீதை யென்னும் பெயரையுடைய பராசத்தி சுத்தம். ஆதலால், சுத்தமாகிய சிவமென்னும் பெயரையுடைத்தாய்க் காணவியாத்திக் கெட்டாத அதி சூக்குமமாயளவுபடாத பிரகாசமாய்த் தியானரூபமாய் விளங்கப் பட்டுச் சர்வவியாபியா யிருப்பர். சாந்தி யென்னும் பெயரையுடைய திரோபவ சத்தி அரூபை. ஆதலால், அரூபமாகிய அமூர்த்தி யென் னும் பெயரையுடைத்தாய் வடிவறுதியாதலால் விகற்பமாகிய கலை களுக்கப்பாற்பட்டுத் தம்பாகாரமான வொப்பற்ற இலிங்க ரூபமாய்க் கோடி சூரியப் பிரகாசமாயிருப்பர். மூர்த்தி சதாக்கியரது தன்மை எங்ஙன மிருக்குமெனின், வித்யாகலை யென்னும் பெயரையுடைய இச்சாசத்தியிற் றோற்றுதலால் மூர்த்தி யென்னும் பெயரையுடைத் தாய்க் காணப்பட்ட வடிவையு முடைத்தாய்க் காலாக்கினிக் கொப்பா கிய பிரகாசத்தினையு முடைத்தாய் இலிங்கவடிவாய் அதனது ஊர்த்வ

பாதத்திலே ஒரு திருமுகமும், மூன்று கண்ணும், இரண்டு கையுமுடையவராக இருப்பர். கத்தரு சாதாக்கியரது தன்மை எங்ஙனமிருக்குமெனின், பிரதிஷ்டாகலையென்னும் பெயரையுடைய ஞானசத்தியிற்றோற்றுதலால், கத்தரு வென்னும் பெயரை யுடைத்தாய்ப் பரிசுத்த படிகப் பிரகாசமான திவ்விய லிங்கமுமாய் அதனது உச்சியிலே நான்கு திருமுகமும், பன்னிரண்டு திருநயனமும், எட்டு அஸ்தமும், வலப்புற அஸ்தங்களிலே சூலம், மழு, வாள், அபயம், இடப்புற அஸ்தங்களிலே பாம்பு, பாசம், மணி, வரதம் என்னும் ஆயுதங்களைத் தரித்துக் குறைவில்லாத இலக்கணங்களுடனே கூடியிருப்பர். கன்மசாதாக்கியரது தன்மை எங்ஙன மிருக்குமெனின், நிவிர்த்தி கலையென்னும் பெயரையுடைய கிரியாசத்தியிற்றோற்றுதலால், தொழிலென்னுங் காரணப் பெயரை யுடைத்தாய் மேற்சொல்லிய ஐந்து சாதாக்கிய ரூபமுங்கூடித் திரண்டு சமட்டி ரூபமாய், விந்து மயமாகிய கிரியாபீடமும், நாதமயமாகிய ஞானலிங்க முமாக இருப்பர்.

## தத்துவப் பிரகாசம்

நாடுறுகத் துருவாதி யாகு மைந்து
நாதமய மாகையினு லிலிங்க மாகும்
வீடுதவு ஞானசத்தி முதலா மைந்தும்
விந்துமய மாகையினுற் பீட மாகும்
தேடரிய வாமிவையா தாரா தேயஞ்
செறிந்திலிங்க மாமந்த லிங்கத் திற்கும்
பீடுதவு தொழிற்சத்தி சேருங் கன்மப்
பெயருருசா தாக்கியமே யங்க மாகும்.

என்பதனுற்காண்க.

இக் கன்மசாதாக்கியர் அன்பராயுள்ளவர்கள் தியானித்துப் பூசித்து உய்தல் காரணமாக இலிங்க மூர்த்தமாக இருப்பினும், அங்கப் பிரத்தியாங்க சாங்க உபாங்கத்தோடு ஈசானுதி ஐந்து திருமுகமும் பத்து அஸ்தமும் உடையராய்த் தியான ரூபியாயிருப்பர்.

அத்துவித வெண்பா

பரையாதி யிச்சையொடு ஞானங் கிரியை
தரமாகு மைந்துபெயர் சத்தி—யுருவாகத்
தோன்றுஞ் சதாசிவன்ருன் ரேன்றமிதிற் சத்தியைந்தால்
தோன்றுமைந்து சாதாக் கியம்.

பரமரகசிய சடுத்தலம்

சிவம்பரம சுகந்தமுலா மூர்த்தா மூர்த்தந்
திருமுகமொன் றிருகைவிழி மூன்று மேனி
உவலநிறங் கத்தருவம் பகமீ ராறங்
கொருநாலு முகங்கர மெட் டுளவாங் கன்மத்
துவமருவு மிலிங்கமதா யொன்றி லொன்று
தொடர்ந்தடையு மொழிந்தடைவே மூர்த்தங் கூடி
அவமறநற் றிருமுகமைந் தங்கை யீரைந்
தைம்மூன்று விழியாங்கன் மத்தமரு மிதுவே.

என்பதனுற்காண்க.

சிரசு, முகம், இருதயம் முதலிய உறுப்புகளே அங்கமாம். வட்சம், கண்டம், தனம், வாகு, நாபி, உதரம், நேத்திரம், நாசி, கன்னம், பாதாங்குலி முதலிய உறுப்புகளே பிரத்தியங்கமாம். சூலம், பரசு, வாள், வச்சிரம், பணி, பாசாங்குசம், மணி, அபயம், வாத முதலிய உறுப்புகளே சாங்கமாம். வஸ்திரம், ஆபரணம், முந்நூல், மாலை முதலிய உறுப்புகளே உபாங்கமாம்.

வாதுளாகமம்

அங்க ப்ரத்யங்கஞ்ச உபாங்கஞ்சஞ் சதுரோபவேத்
ஶிரோவக்தாஞ்ச ஹ்ருதயமங்கஞ் சேதி ப்ரகீர்த்திதம்
வக்ஷ: கண்டத் தனௌவாகு நாபிகுக்ஷி யுதரந்ததா
நேத்ரநாஸாஸ்ய கர்னஞ்ச பாணிபாதௌ ததாங்குலீ
ஊருஜானுச ஜங்கேச ப்ரத்யங்கஞ்சேதி கீர்த்யதே
மூர்த்தீனும் குணரூபந்து ஸாங்கஞ்சேதி ப்ரகீர்த்திதம்

குணஞ்சின்ன மிதஞ்ஞேயம் தத்குணம்கத ஶதாபவேத்
குணம்ஸத்யம் ப்ரதாபஞ்ச துர்பேத்யா நுக்ரஹந்ததா
தாரித்ரிய மாயாவிவன்னஞ்சா நாகஞ்சா க்ருதரேவச
ஏர்த்தே குணிப்ரோக்தா தேஷாம்லக்ஷண முச்யதே
த்ரிகுண ஶூலமித யுக்தம் ஸத்யம் பரஶு ரிஷ்யதே
கட்கமீஶ ப்ரதாபோங் துர்பேத்யம் வச்சிரமீக்ஷயதே
ஈச்சியனுக்ரஹ கஞ்சைவா வபயஞ்ச ப்ரசஸ்யதே
ரிதிச்யா நாகரூபந்து பாஶமாயா ஸ்வரூபகம்
விவின்னமங் குஶஞ்சைவா கண்டா நாதாத்மகம் விது:
ஶங்க்ரா மக்நி ரூபஞ்சயாத பாஶாணும் ஸரங் பட்சமாஸாக்ருதி:
ஏதேவை குணரூபஞ்ச ஸாங்கஞ்சேதி ப்ரகீர்த்திதம்
வஸ்த்ரோபவீத மாலாஞ்ச கந்தமா பரணந்ததா
ஆஸனவரணஞ்சைவா உபாங்கஞ்சேதி கீர்த்திதம்மிதி.

என்பதனாற்காண்க.

இங்ஙனங் கூறிய கன்மசாதாக்கியாதி ஆறு வதனங்களின் திக்கு பேதம் விக்கிரக பேதங்களை

### பரமரகசிய சடுத்தலம்

(1) ஈசானம் படிகநடுக் கிழக்க தாகு
மிலங்கியகுங் குமநிறந்தற் புருட மென்ப
தேசாரு மகோரநிறங் கருமை தென்பாற்
றிகழ்வாம முத்தரநற் செம்மை யாகு
நேசாருங் குடதிசையே யாகும் வெண்மை
நிறஞ்சத்தி யோசாத நிகழா தோங்கு
மாசாரு மலமகல யாவுந் தாங்கும்
வளரொளிசே ரதோமுகமிவ் வாற தாமே.

(2) பொற்புறுமுச் சவவிதியும் புறமுங் கூறிற்
புகழ்சத்தி யோசாத நிற்ற லாகுங்

கறபமரும் வாமமுக மிருத்த லாகுங்
கருதியதா வரலிங்க மகோர மாகுந்
தற்புருடம் வாகனமேற் கொள்வ தாகுந்
தவிராத திருநடமீ சான மாகு
மற்புதமா மதோமுகத்தி லுறக்க மாமென்
றறைந்திடுவ ரிறையருணூ லுணர்ந்த ளோரே.

என்பதனுற் காண்க.

இனிச் சிவன், சதாசிவன், ஈசனென்னும் திருநாமத்தோடு லய போகவதி காரராய் நிட்களம், நிட்கள சகளம், சகளம் ஆகிய இஷ்டப் பிராண பாவ லிங்கரூபமாய்ச் சத்தியுத்த பிரவர்த்தராய், இவையெல்லாங் கடந்து விளங்கும் பசுபதியாகிய பரம சிவத்திற்குத் தன்மை யியல்பென்றும், பொதுவியல்பென்றும் இரண்டியல்புண்டு. அவற்றுள் தன்மை யியல்பாவது நாமம், ரூபம், ஜாதி, குணம், கிரியை முதலிய யாவு மிலதாய் வாக்கு மனதீத கோசரமாய்ச் சர்வ வியாபியா யுயிர்க்குயிரா யானந்தமே திருமேனியாயிருப்பது.

அத்துவித வெண்பா

(1) நாமமொடு சாதி நயந்த குணங்கிரியை
யாமிவைக ளெட்டரிய வற்புதமாய்ச்—சேமப்
பொருளாய்ப் புகலரிதாய்ப் போகமின்றாய் நீங்காப்
பொருளா யுயிர்க்குயி ராகி.

என்றும்,

(2) நின்றநிலை தன்னியல்ப தாகு நிகழ்பதிக்கு

என்றும்,

திருவாசகம்

ஒருநாம மோருருவ மொன்றுமில்லார்க் காயிரந்
திருநாமம் பாடி

என்றும்,

சிவஞான சித்தியார்

சிவனருவுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்
என்றும்,

தேவாரம்

வேலைநஞ்சுண் மழைதருகண்டன் குணமிலி வானவன்
என்றும்,

திருவிளையாடற் புராணம்

மூவண்ண றன்சந்நிதி முத்தொழில் செய்ய வாளா
மேவண்ணல்
என்றும்,

பட்டணத்துப் பிள்ளையார்

வாக்குமனங் காணாத வாசாம கோசரத்தை
என்றும்,

திருவருட்பயன்

(1) அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரிலிறை நிற்கு நிறைந்து.
என்றும்,

(2) அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொ டுத்தருளால்
என்றும்,

(3) உண்மையறி வானந்த வுருவாகி.
என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க.

இனிப் பொதுவியல்பாவது அநாதிநித்யமாயிருக்கும் ஆணவ மலசத்தியால் ஞானந் தடைப்பட்டு நிற்கும் ஆன்ம வர்க்கங்களுக்குப் பரிபாகத்தை வருவித்து அம் மலம் பரிபாகப்பட்டு அவ் வுயிரினை விட்டு நீங்குங் காலபரியந்தம் அம் மலந்தானாய் நின்று செலுத்துங் காருண்யமேயாம். இங்ஙனம் இக் கிருத்தியங்களைச் செய்யுந் தன்மையும், அப் பதிக்கு அநாதி யியல்பாதலால், ஆன்மாக்கள் ஆணவமல சத்தி மறைப்பினாற் றமது இச்சா ஞானக் கிரியையினது வியாபார மற்று அதித நித்திரைசெய்பவன் எப்படி யொன்றுந் தோன்றாது

இடப்பனேவப்படித் தமோமயமாகிக் கிடக்க, நிலைபெற்று ஓர் காலுந் தீராத அவ் வாணவ வியாதியைத் தீர்க்க வுண்டான கிருபையே சிற்சத்தி. இச் சிற்சத்தியே சிவத்தினது பொதுவியல்புக்குக் காரணத் திருமேனி. மகாசாதாக்கியர் முதலிய ஆறு சாதாக்கியருமே சூக்குமத் திருமேனி. கன்மசாதாக்கியர் கொள்ளப்பட்ட சந்திர சேகா முதலிய இருபத்தைந்து மூர்த்தங்களுமே தூலத் திருமேனி.

## அத்துவித வெண்பா

(1) ஆறைந்தோ டொன்று மருந்தூல சூக்கமெனக்
கூறுகின்ற வாறுசத்தி கூடவே—கூறிலது
வாகுமதி சூக்கதனு வாமதனு னின்மலற்கு
மாகுந் தனுமூன் றதாம்.

என்பதனுற்காண்க.

ஆதலால், சிவகிருபையைப்பெறவேண்டுமென்னுந்தாகமுடைய அன்பராயுள்ள அதிபக்குவர் சமட்டிரூபமாயுள்ள கன்மசாதாக்கிய ரென்னும் இலிங்க மூர்த்தத்தையே பூசித்துய்தல் வேண்டும்.

(2) நோக்கிக் கருணையெய்தி நோன்பின் றகுதிதனக்
கேற்கும்பே றீயு மியற்கையினு—லாக்கரிய
வானகன்ம சாதாக் கியம்பிதா னந்தமக்கிங்
கானதுநீ யன்பா லறி.

என்பதனுற்காண்க.

இங்ஙனம் இலிங்கோற்பவக் கிரமங் கூறியதென்க. இனி இவ் விலிங்கரூப இலக்கணத்தைப் பீடம், படி, நிதம்பம், கோமுகம், மேல் வட்டம், நாளத்தடி, கோளகம், சிகை ஆக எட்டு இடமாகப் பிரித் தடக்கி, அவ் வெட்டில் பதினேரு உருத்திரபேதங்களை பீடமாகவும், இருபத்தைந்து மூர்த்த பேதங்களை படியாகவும், அஷ்டவித்தியேசு ரர்களை நிதம்பமாகவும், கலைகளை கோமுகமாகவும் பிரித்தடக்கி, இந் நான்கிடங்களைச் சகள வடிவாகவும், சத்திகள், சாதாக்கியர்கள், மூர்த் திகள், வதனங்களாகிய இவைகளை மேல்வட்டமாகப் பிரித்தடக்கி.

இதனைப் பிரபாவமான சகள நிட்களவடிவாகவும், சிற்சத்தி, சிதாகாயம், சூனியமாகிய இவைகளை முறையே நாளத்தடி, கோளகம், சிகை ஆகிய மூன்று இடமாகப் பிரித்தடக்கி, இவற்றை நிட்களவடிவாகவும், சிவப்பிரகாசசுவாமிகள் இஷ்டலிங்க அபிடேகமாலையில் முதற் செய்யுளிற் சொல்லி யிருக்கின்றனர். அதிலும் இன்னும் இதன் விரிவை ஆகமங்களினுங் கண்டுகொள்க.

இஷ்டலிங்க வபிடேகமாலை

பந்தமறு மரர்மிருடர் பவருருத் திரர்களொரு
பதினொருவர் மிளிர்பீ டமேற்
படியிலை யைவகைப் படுமீசர் தாநிதம்
பத்திலெண் வித்தை யிறைவர்
சந்தமுறு கோமுகத் தைங்கலைகள் சத்திசா
தாக்கியம் மூர்த்தி வதனம்
தட்டற்ற வட்டத்தி லொட்டற்ற சிற்சத்தி
தானுற்ற நாளத் திலே
நந்தலற வருகோள கந்திகழ் சிதம்பரம்
நற்சிகையி னிற்சூ னியம்
நட்டமற வமைகின்ற விட்ட வடி வொடுநின்ற
ஞானமய மோன நடுவோ
டந்தமற முந்துபர மானந்த நீநந்த
வபிடேக மாடி யருளே
யறிவுற்றெ னங்கைமலர் செறிவுற்ற மர்ந்தவிறை
யபிடேக மாடி யருளே. (க)

[இச் செய்யுள் என்னுதலிற்றோ? எனின், இங்ஙனம் பதியிலக்கணங் கூறி, இனிப் பசுபாசவிலக்கணங் கூறுவானெடுத்துக் கொண்டருளுதல் நுதலிற்று.]

ஒருமலவிஞ் ஞானகலர் பிரணவா தியவனுச
தாசிவர்க ளட்ட வித்த

ருற்றமந் திரேசரிவ ரைச்சுத்த மாயைபா
ஹுதவியதி கார மீந்தே
பொருவின்மந் திரேசர்மு னனந்தேசராற்சுத்தா
சுத்தசத்தி பாலி ருமலப்
புகலுநூற் றீரொன்ப தாம்பிர ளயர்க்குநற்
புகழ்தூல சூக்ம தனுவும்
பெருமையொடு தந்திவரி லொருவராஞ் சீகண்டர்
பிரகிருதி பான்மு மலராம்
பிரிவிலரி யயனாதி சகலருக் குடறந்து
பின்னுயிர்க ளுக்கிவர் களா
லருமையைந் தொழில்செயவ மைத்தவ விகாரனே
யபிடேக மாடி யருளே
யமலமுதுகிரியினமர்குமரசற்குருபரந
லபிடேக மாடி யருளே.

(இ-ள்) ஒரு மலம் - ஆணவமல மொன்றினையுடைய, விஞ்ஞானகலர் - விஞ்ஞானகலப் பசுவர்க்கமாகிய, பிரணவாதிய - பிரணவர் முதலிய, அணுசதாசிவர்கள்—, அட்டவித்தர்-அட்டவித்தியேசுரர், உற்ற - பொருந்திய, மந்திரேசர் - சத்தகோடி மகா மந்திரேசுரர், இவரை - ஆகிய இவர்களை, சுத்த மாயைபால் - சுத்தமாயையினிடமாக, உதவி - சிருட்டித்து, அதிகாரம் ஈந்து-சிருட்டி யாதி யதிகாரத்தையுங் கொடுத்து, பொருவில் - ஒப்பற்ற, மந்திரேசர் - மந்திரேசுரராலும், முன் - முற்கூறிய, அனந்தேசர் - அனந்ததேவராலும், சுத்தாசுத்த சத்திபால் - சுத்தாசுத்த மாயையினிடமாக, இருமலம் - ஆணவ கன்ம மென்னு மிருமலப் பசுவர்க்கமென்று, புகலும் - சொல்லப்பட்ட, நூற்றீரொன்பதாம் - நூற்றுப் பதினெட்டென்னும், பிரளயர்க்கு - பிரளயாகலருக்கு, நற்புகழ் - நல்ல புகழையுடைய, தூலசூக்மதனுவும் - தூல சூக்கும தேகங்களையும், பெருமையோடு-பெருமையுடனே, தந்து - கொடுத்து, இவரிலொருவராம் - இவர்களிலொருவராகிய, சீகண்டர்- ஸ்ரீகண்ட வுருத்திரால், பிரகிருதிபால் - அசுத்தமாயையென்னும் பிரகிருதியினிடமாக, மும்மலராம் - மும்மலப் பசுவர்க்கமாகிய, பிரிவில் - நீங்காத, அரியயனாதி - விஷ்ணு பிரம்மா முதலிய, சகலருக்கு -

சகலர்களுக்கு, உடல்தந்து - சரீரங்களைக் கொடுத்து, பின் - பின்பு, உயிர்களுக்கு - ஆன்மாக்களுக்கு, இவர்களால் - இங்ஙனஞ் சொல்லிய கர்த்தர்களால், அருமை - அரிய, ஐந்தொழில் செய - பஞ்ச கிருத்தியங்களையும் நடத்திவர, அமைத்த - அதிகாரங்களைக் கொடுத்த, அவிகாரனே - நிர் விகாரியே, அமல - நிருமலனே, முதுகிரியினமர் - விருத்தாசலத்திலெழுந்தருளிய, குமர சற்குருபர - குமாரதேவ னென்னுந் திருநாமத்தினையுடைய பரமாசிரியனே, நல் அபிடேக மாடியருளே - அடியேங்கள் செய்யும் நல்ல அபிஷேகத்தைத் திருவுளங் கொண்டருளவேண்டும் (எ-று.)

(ப-ம்.) விஞ்ஞானகலராவார் ஆணவமலமொன்றுமேயுடையராய்ச் சிவசந்நிதான விசேஷமாத்திரத்தாலே சுத்தமாயையினிடமாக உண்டாக்கப்பட்ட தனு கரண புவன போகங்களையுடையரா யெண்ணிறந்திருப்பர். இவர்களது ஞானசத்தி நிபாதமாவது மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம், அதிபக்குவமென ஐவகையாம். இவருள் அதிபக்குவர் பரிசுத்தஞானமுடனே முதன்மை யதிகாரமுடையராய்ச் சித்துக்குருவா லனுக்கிரகிக்கப்பட்டு, சிவபெருமானுக்குச் சமமாகப் பரமுத்தித் தானத்திலே யிருப்பர். தீவிரதரபக்குவர் ஆணவமலம் ஒழிந்து அனந்த ஞான முதலாயுள்ள ஆறு குணங்களாலும் விளங்கி, அளவிறந்த போகங்களுடனே யாவரையும்இரக்ஷித்து, விந்துதத்துவத்திலே யிருப்பர். தீவிரம், மந்ததரம், மந்தமென்னும் பக்குவத்தையுடைய அபக்குவர் யாவரெனின், பிரணவர் முதலிய அணுசதாசிவர்கள் பதின்மர், அனந்தேசுரர் முதலிய வித்தியேசுரர் எண்மர், சத்தகோடி மகாமந்திரேசுரர் என மூவகையாவர்.இவருள் அணுசதாசிவர் கீழுள்ள வித்தியேசுரருக்கும், அதற்குக் கீழுள்ள மந்திரேசுருள் மலபரிபாகத்தின் மிகுதியினாலே சிவபெருமான் சித்துக் குருவாய் வந்து அனுக்கிரகிக்கப்பட்டுப் பரமுத்தியைப்பெற்ற மூன்றரைக் கோடிபேர் நிற்க, மற்றைய மூன்றரைக் கோடிபேர்கட்கும், மற்றுமுள்ள விஞ்ஞானகலருக்கும் அனுக்கிரகிக்கும் அதிகாரத்தைப் பெற்று, சதாசிவதத்துவத்திலே யிருப்பர். இனி அனந்தேசுரரென்னு மயேசுரரானவர் கீழுள்ள மற்றைய வித்தியேசுரருக்கும், அதிகாரமலசம்மந்தரான மூன்றரைக் கோடி மந்திரேசுரர்க்கும், மண்டலீசர் முதலிய பிரளயாகலராயுள்ள சர்வான்மாக்களுக்குந் தனித் தனியே சுத்தாசுத்தமாயையினிடமாக அசாதாரண

சூக்கும அண்டபுவனங்களையும், சரீரங்களையுங்கொடுக்கும் அதிகாரத்தைப் பெற்றுச் சுத்தவித்தியா தத்துவத்திலே யிருப்பர். ஆதலால், "ஒருமல விஞ்ஞானகலர் பிரணவாதிய வணுசதாசிவர்க ளட்டவித்தருற்றமந்திரேச ரிவரைச் சுத்தமாயைபா லுதவியதிகாரமீந்தே, பொருவின் மந்திரேசர்மு னனந்தேசராற் சுத்தாசுத்த சத்திபா லிருமலப், புகலு நூற்றீரொன்பதாம் பிரளயர்க்கு நற்புகழ்தூலசூக்ம தனுவும், பெருமையொடு தந்து" என்றது. இனி இருமல சம்பந்தரான பிரளயாகலர் சத்தி நிபாதஹீனதிக்கத்தினுற் பக்குவரென்றும் அபக்குவரென்றும் இருவிதமாவர். இவருள் பக்குவர் மலபரிபாகத்தின் மிகுதியினலே சிருட்டி காலத்திலே சிவபெருமான் தேவகுருவாய் வந்து அனுக்கிரகிக்கப்பெற்றுப் பாமுத்தியைப் பெற்றவர்கள். இனி அபரமுத்தி பெற்றவர்கள் சிவனல் அனுக்கிரகிக்கப்பட்டிருக்கையிலேயும், மலபரிபாகத்தின் மந்தத்தாலே யதிகாரமலத்தோடுங் கூடியுள்ளவர்கள். அவர்கள் யாவரெனின், ஆணவ, கன்மமென்னும் இரு மலத்தையுடைய ககனேசர், மண்டலீகர்முதலாக எண்மர்; குணமுடியர், குரோதாதிபர் முதலாக எண்மர்; ஸ்ரீகண்டர் ஒருவர்; வீரர் ஒருவர்; பிரமாண்டர், தாரகர் முதலிய வுருத்திரர் நூறு பெயர். ஆக நூற்றுப்பதினெட்டுப் பெயர். இவர்கள் மேற்சொல்லிய வித்தியேசுரராலே பிரேரிக்கப்பட்டுப் பிரகிருதிக்குக் கீழுள்ள கிருத்தியங்களைச் செய்து கலாதத்துவமத்தியிலும் குணதத்துவத்திலும் இருப்பார்கள். இவரி லொருவராகிய ஸ்ரீகண்ட வுருத்திர மூர்த்தியானவர் ஆணவ காமிய மாயையென்னுமும் மல சம்பந்தரான விஷ்ணு பிரம்மா முதலிய மற்றைய சீவராசிகளுக்கும் பிரகிருதியினிடமாக அசாதாரண சாதாரண தூல சூக்கும அண்ட புவன சரீரங்களை யுண்டாக்குவராதலால், "இவரிலொருவராஞ்சீகண்டர் பிரகிருதிபான் மும்மலராம், பிரிவிலரியயனுதி சகலருக்குடறந்து" என்றது. மேற்சொல்லிய ஸ்ரீகண்டவுருத்திரரால் உண்டாக்கப்பட்ட பிரம்மாவானவர், பிருதிவி முதலாகாசமீருகச் சொல்லப்பட்ட பஞ்சபூதத்தினிடமாகப் பௌதிக தூலபரிணமமாக அண்டங்களையும், புவனங்களையும், சகலராயுள்ள மற்றைய சர்வான்மாக்களது தூலசரீரங்களையும் உண்டாக்குவர். இப் பிரம்மாவினுலுண்டாக்கப்பட்ட பஞ்சபூதபௌதிக பரிணம அண்டபுவன சரீரங்களை விஷ்ணுவானவர் இரக்ஷிப்பர். இங்ஙனங் கூறிய பிரம்மா சிருட்டியும், விஷ்ணு திதியும், ஸ்ரீகண்டவுருத்திரர் சங்காரமும், அனந்தேசுரரான மயேசுரர் திரோபவமும், அணுசதாசிவர்

அனுக்கிரகமும் ஆக இவ் வைவரும் பஞ்சகிருத்தியங்களை உடலி னிடத்தும் உயிரினிடத்துமாக நடத்துவர். இவ் வதிகாரம் பெற்ற இக் கர்த்தர்களான தாங்கள் தங்கள் சரீரங்களையும் தாங்களிருந்த சஞ்சரிக்கும் அண்டங்களையும், புவனங்களையும், போகங்களையும் அதற்காதாரமான அசாதாரண சாதாரண தத்துவங்களையுந் தாங் களேயுண்டாக்கிக் கொள்ளுகைக்கு வல்லவரான பரமகர்த்தர்க ளல்லராதலால், "பின்னுயிர்களுக் கிவர்களாலருமை யைந்தொழில் செயவமைத்த" என்றது. ஒரு மகாப் பிரபுவானவன் தச்சன் முதலாயி னோரைக் கொண்டு தேர்முதலாயினவற்றைச் செய்தும், தான் அவ் விகாரமின்றியிருப்பதுபோல, தேவர்களுக்கெல்லாம் மகாதேவனாகிய சிவபெருமான் தனது சந்நிதிமாத்திரத்திலே முதற்காரணமான சுத் தம், சுத்தாசுத்தம், அசுத்தமென்னு மூன்று மாயையினிடமாக இங் ஙனங் கூறிய கர்த்தர்களையும் உண்டாக்கி அவர்களுக்கு இச் சிருட்டி யாதி யதிகாரங்களையுங் கொடுத்து நடத்தியும், அவ் விகாரம் தனக் கில்லா திருக்குஞ் சத்திசாமர்த்திய பசுபதியாகிய பரமகர்த்தராக விளங்குதலால் "அவிகாரனே" என்றது.

(வி-ரை.) விஞ்ஞானகலப் பிராப்தி எதனாலுண்டாயிற்றெ னின், ஞானமற்ற துறவினாலும், அகம்பிரமமென்கிற விசிட்ட ஞானத்தினாலும், பிக்ஷையினாலும் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை யென்னு மூன்று கலைகள் சோதிக்கப்பட்டுச் சிவஞானம் பிரகாசியாது ஆணவமல விமோசனமில்லாது நின்ற நிலையினாலென்க.

## சிவநெறிப் பிரகாசம்

(1) சன்னியா சத்தால் யோக சாதனையாற் றவத்தாற்
சற்குருவான் முக்கலையிற் சாரும்வினை யனைத்து
மன்னாது சோதனைசெய் திடுதலினா லாதன்
மாயையிரு வினையனைத்து மாயையுநீங் கிடவே
யின்னாத வாணவத்தாற் றடைபட்ட ஞான
வியல்பினதா யறிவின்றி யிருந்துமல பாகத்
தன்னாளி னரனருளான் முத்தியினை யடையு
மறிவிலிது விஞ்ஞான கலாதிலக் கணமே.

என்பதனாற்காண்க.

இனிச் சத்திநிபாதம் ஐவகையென்பதையும், அவற்றுள் மூன்று வகைச் சத்திநிபாதத்தையுடைய அபக்குவர் அதிகாரமல சம்பந்த ராய்ச் சதாசிவதத்துவம், ஈசுரதத்துவம், சுத்தவித்யாதத்துவம் ஆகிய இவற்றிலே யிருப்ப ரென்பதையும்,

## சிவநெறிப் பிரகாசம்

(2) சேர்ந்திடிற்றீ விரதரமாஞ் சத்திநி பாதஞ்
சிவனுகப் பரமுத்தி சேர்ப்பனவர்க் கன்றே
சார்ந்தவர்கள் தீவிரமாஞ் சத்திநி பாதந்
தானைந்து பேதமா மதிலுயர்ந்தோர் தம்மைப்
பேர்ந்திடவே பரமுத்தி தானத்தே பொருந்திப்
புனிதமா ஞானமுடன் முதன்மையெல்லாம் பொருந்தி
வாய்ந்திடவச் சிவசமமாய் மன்ன வைப்பன்
மற்றவருக் கினம்பருவ மன்னி னோர்க்கே.

(3) இருளொழித்திட் டெவ்வறிவு முதலா யுள்ள
விருமூன்று குணம்விளங்கி யெங்கு மாக
வருள்புரிந்து விந்துவாந் தத்து வத்தே
யமர்விப்ப னளவிறந்த போக மார
பருவத்தை யவர்க்கினை மாகப் பெற்ற
பான்மையினுன் மூவகையோர் பாச நீக்கி
யுருவத்தை யுடைத்தாய சதாசி வேச
ருருத்திரர்க ளாகவறி வோங்கச் செய்தே.

என மற்றும் வருவனவற்றுற் காண்க

இனிப் பிரளயாகலப் பிராப்தி எதனுலுண்டாயிற் றெனின், பிரளயகாலத்திலே கலாபெந்தமற்றவர்களாதலானும், இவர்கள் தபோ பலத்தால் ஆணவ கன்மம் பரிபாகமாகிற அவதரத்திலே நிவர்த்தி பிரதிட்டை யென்னு மிரண்டுகலைகள் சோதிக்கப்பட்டு, விஞ்ஞான கலரில் மந்திரேசுரர் பதத்தைப் பெற்று, சுத்த வித்தையை யார்ச்சித் திருந்து சிவனது கிருபையால் அவ் வதிகாரத்தை நடத்துவதனுலும், அபக்குவத்தினுற் சிருட்டி காலத்திற் கன்மத்துக்கீடாக இருநூற்

திருபத்துநான்கு புவனத்திலும், நால்வகைத் தோற்றம் எழுவகைப் பிறப்பு எண்பத்து நான்கு நூறுயிரம் யோனி பேதத்திலும் புக்குழன்று சகலராய் விடுவதனுலும் மகா சங்காரகாலத்தி லொடுங்குவதனுலும் வந்ததென்க.

### தத்துவ விளக்கம்

(1) பெற்றதவப் பயனுற் பிரளயா கலரிற் சிலரைக்
குற்றமின் மந்திர நாயக ராக்குமெங் கொச்சையர்
கோன்
மற்றவர் மண்டலர் குரோதாதி பார்வீரர் சிகண்டர்சி
ருற்றவுருத் திரரெட்டெட் டொன்ருென்று
நூற்றெண்ணிவர்க்கே.

(2) வருத்தவரிற் புவனுதிப ரேனையர் மற்றவர்பின்
ருெருத்தவரிற் பந்தமுற்றினர் தூநெறி செல்வர்
பிற்பான்
மிகுத்தவர்தாம் புரியட்டகத் தோடுவினை வழியிற்
பகுத்தபிறப் பிற்சுழல்வர் முப்பாசமும் பற்றினரே.

என்பதனுற் காண்க.

இனிச் சகலாகலப் பிராப்தி எதனு லுண்டாயிற்றெனின், ஆணவ காமிய மாயை யென்னு மும் மல சம்பந்தராய்த் தீக்ஷாதிக்கமின்றிச் சிருட்டி காலத்தில் கலையாதி தத்துவங்களோடு கூடியண்டசம் சுவேதசம் உற்பிச்சம் சராயுசமென்னு நால்வகையோனி எழுவகைத் தோற்ற மெண்பத்து நான்கு நூறுயிரம் தேக பேதப் பிறப்பினை யெடுத்து இருநூற்றிருபத்து நான்கு புவனங்களினுழன்று திரியுமவதாரத்தில் புத்திபூர்வாபுத்திபூர்வ புண்ணிய பலத்தால் இருவினையொப்பு மலபரிபாக முதலியவற்ருற் சற்குரு நேரிட்டு அச் சற்குருவாற் பெறுஞ் சத்திய நிருவாண தீக்ஷையினுல் அத்துவா சோதனை செய்யப்பட்டுத் தவவலியினுற் றேகாந்தத்தின் மேற் சொல்லிய பிரளயாகல விஞ்ஞானகலப் பிராப்திகளை மலபரிபாகத்தின் மந்தத்துக்கீடாகச் சிவபெருமா னனுக்கிரகத்தினுற் பெற்றுஞ் சிலர் பரிபாகத்தின் மிகுதியினுற் சிவபெருமான் மானிடச் சட்டை

சாத்தி விகிர்த குருவா யெழுந்தருளிவந்து சின்மயதீக்ஷை செய்யப் பெற்றும் பரமுத்தியை யடைவார்கள்.

## சிவநெறிப் பிரகாசம்

இனிச்சகல ரிலக்கணந்தா ணுண வத்தோ
டிருவினைகள் மாயேய மிசைந்து போக
முனிப்பலவும் பிராகிருத தேகந் தன்னை
யுற்றவத்தை யைந்தினையு முடைத்தாய் நாளுஞ்
சனித்திறந்து தேவருடன் மனிதர் நாகர்
தானுதி சராசரங்கள் யோனி பேத
மனைத்தினிலும் வினைக்கீடாய்ச் சுழன்று முத்தி
யடைவரிரு வினையொப்பி னருட்குருவி னாலே.

மற்றும் வருவனவற்றுற் காண்க.

அணுசதாசிவர்கள் பதின்மராவார்:—பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காணர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேஸ்வரர், அம்சு, ஆக 10. மந்திரேசுரராவார்:—நமா, சுவாகா, வஷட்டு, உம், வவுஷடு, படு, சுவா ஆக 7. இதில் வருக்கமொன்றுக்குக் கோடியாக எழு வருக்கத்திற்கும் எழுகோடிபெயர் எனவறிக. (2)

[இச் செய்யுள் என்னுதலிற்றோ? எனின், இவ் வான்மாக்கள் அநாதியாயுள்ள மலமாயா கன்ம பந்தங்களை மன வாக்குக் காயங் களாற் பரம சிவத்தைப் பூசித்த தவவலிமையானீங்கி யுய்தல்வேண் டுவதாதலால், அவர்கள் இச் சமய தீக்ஷாசம்பந்தம் பெற்றுப் பூசிக்க வேண்டுமென்று கூறுவா னெடுத்துக்கொண்டருளுதல் நுதலிற்று.]

சாற்றியிடு சைவப்பதப் பொருள தறிஞர்சிவ
சம்பந்த மெனவ றைகுவார்
தக்கசா மத்திரெனுந் தத்தசியென் வாக்கியந்
தழுவும் வாதுள மாதியிற்
போற்று சாமானியம் மிசிர சுத்தத்தினெடு
புகழ்வீர மெனநான் கதாய்ப்

புகலுமுதன் மூன்று பூருவபக்க மாமதிற்
    பொலி யங்கலிங்க யிக்க
மேற்றரு சிவாத்துவித மிசைவீர சைவமதை
    யெழிலுத் தரபக்க மதனி
லிம்முறை யினற்சகள தூலமுதன் முத்தனுவி
    லிட்ட முதலாய்ச் செறித்தே
யாற்றலுறு கற்பிற்பிர சாதசுக மருளமல
    வபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமரசற் குருபரந
    லபிடேக மாடி யருளே.

(இ-ள்.) சாற்றியிடு - விசேடித்துச் சொல்லப்பட்ட, சைவப்பதம் - சைவமென்னும் பதத்திற்கு, பொருள் - அருத்தம், அறிஞர் - அறிவாலுயர்ந்தோர், சிவசம்பந்தமென - சிவத்தோடு சம்பந்தமுடையதென்று, அறைகுவார் - சொல்லுவார்கள், தக்க - தகுதியாகிய, சாமத்தில் - சாமவேதத்திற் சொல்லும், தொந்தத்தசியென் - தொந்தத்தசியென்னும், வாக்கியம் - மகாவாக்கியத்தை, தழுவும் - தழுவியிரா நின்ற, வாதுளமாதியில் - வாதுளாகம முதலியவற்றில், போற்றும் - துதிக்கும், சாமானியம் - சாமானிய சைவமென்றும், மிசிரம் - மிசிர சைவமென்றும், சுத்தத்தினொடு - சுத்த சைவமென்றும், புகழ் - இம் மூவாற் புகழப்பட்ட, வீரமென - வீரசைவமென்றும், நான்கதாய் - நான்கு பிரகாரமாய், முதன் மூன்று - முதற்சொல்லிய சாமானியாதி சைவ மூன்றினையும், பூருவபக்கமாமதில் - பூருவபாகத்திலும், பொலி - பொலிவினையுடைய, அங்கலிங்கயிக்கம் - அங்கலிங்க சையோகமாகிய, ஏற்றரும் - உயர்த்திச் சொல்லுகின்ற அரிய, சிவாத்துவிதம் - சிவாத்துவிதத்தை, இசை - சொல்லப்பட்ட, வீரசைவமதை - வீரசைவத்தை, எழில் - அழகினையுடைய, உத்தரபக்கமதனில் - உத்தரபாகத்திலேயும், புகலும் - சொல்லியிருக்கின்றன, இம் முறையினல் - இக் கிரமத்தினல், சகளம் - சகளமாகிய, தூலமுதல் - தூல தேகமுதலிய, முத்தனுவில் - மூன்று தேகங்களிலும், இட்டமுதலாய் - இஷ்டலிங்கமுதலிய இலிங்கங்களை, செறித்து - வாதுளாகமவிதிப்படி மந்திரக் கிரியா வேதா தீக்ஷைகளாற் பிரதிட்டைசெய்து, ஆற்றலுறு - வலிமிகுந்த, கற்பில் - தவக் கற்பினிறுத்தி, பிரசாதம் - சிவப்

பிரசாதத்தையும், சுகம் - நிரதிசயானந்தத்தையும், அருள் - கொடுத் தருளும், அமல - நிருமலனே, குரவ - ஞானாசிரியனே, அமலம் - பரி சுத்தமாகிய, முதுகிரியினமர் - விருத்தாசலத்திலெழுந்தருளிய, குமர சற்குரு - குமாரதேவனென்னுந்திருநாமத்தினையுடைய பரமாசிரி யனே, நல் அபிடேகமாடியருளே - அடியேங்கள் செய்யும் நல்ல அபிஷேகத்தைத் திருவுளங்கொண்டருள வேண்டும் (எ-று.)

(ப-ம்) உலகாயதன் முதலிய புறமதங்களையெல்லாங் கண்டித்துப் பிரபஞ்சகாரணமான ஒரு கடவுள் உண்டென்றும், அவனாற் சித்தி புத்திகளை யடையப்பட்ட வெண்ணிறந்த வான்மாக்களுண்டென்றும், அச்சமயிகளெல்லாம் புத்திபூர்வ வபுத்திபூர்வ புண்ணிய விசேடத்தால் இச்சைவசமயத்தை யடைந்தே மோட்சமடைய வேண்டியதென் றும் வேதாகமங்கள் கூறுதலால் "சாற்றியிடுசைவம்" என்றது.

### சிவஞான சித்தியார்

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவைநின்று மாரணங்கள் படித்து
மருங்கலைகள் பலதெரிந்து மருந்தவங்கள் புரிந்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற் சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

என்பதனாற் காண்க.

சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் ஆகிய உட்சமயமாறு. இதிற் சைவ பேதமான அவிகாரவாதம், சங்க ராந்தவாதம், ஐக்கியவாதம், பரிணாமவாதம், மாயாவாதம் முதலான நித்திய முத்திக்கருகரல்லாத பேதசைவ சித்தாந்தம் போலல்லாது நித்திய முத்தியென்னும் அங்கலிங்க சையோகமாகச் சிவத்தோ டிரண்டறச் சம்பந்தித்திருப்பதே சைவமாதலால், "சைவப்பதப் பொருளதறிஞர் சிவசம்பந்தமென வறைகுவார்" என்றது.

## பிரபுலிங்க லீலை

(1) ஆகமம் புகனெறி யடைவ னாயினுஞ்
சோகமில் சைவநற் றுறையை நன்றெனச்
சேர்குத லரிதது சேர்வ னாயினு
மேகலிங் கையிக்ய னாகுதலன் றெண்மையே.

(2) புறந்தரு சமயம் புக்குப் புறமலாச் சமயத் தெய்தி
யறந்திகழ் சைவ முற்றுங் கதிர்சரி யாதி யாற்றிச்
சிறந்துள வீர சைவஞ் செறிந்தபின் வீடு நண்ணு
நறுந்தளிர் கவற்று மேனி நனைமலர் வல்லி யன்னாய்.

என்பதனாற் காண்க.

மேம்பாடுடைய சாமவேதத்திற் கூறுந் தோந்தத்தசி யென்னும் மகாவாக்கியத்தைத் தழுவியிராநின்ற வாதுளாகமம், வீராகமம், மதடாகமம், அசிந்தியாகமம், காமிகாகமம் முதலியவற்றில் தோம் பதார்த்தமான சிவன், தத்பதார்த்தமான அருள் தானாய் அவ்வருள் அசிபதார்த்தமான சிவலிங்கத்துக்குடலாயிருத்த லனாதிசித்தமென்று இவ் வுடலுக்கு முயிருக்கும் விட்டு நீங்காத சையோக சம்பந்த மிருத்தல் போல் அவ் வங்கமும் லிங்கமு மிரண்டறச் சிவாத்துவித மாகச் சையோகித் திருப்பதே சிவசம்பந்தமென்று பிரதிபாதித் தலால் “தக்கசாமத்தி ளுந்தத்தசி யென் வாக்கியந் தழுவும் வாதுள மாதியில்” என்றது.

## சுத்த சாதகம்

முற்பத மான தொம்பதப் பசுவே
முடிரு ணிங்கிச்சுத் தமதாய்ப்
பிற்பத மான தற்பத வருளிற்
பிறங்குந்தா தான்மிய மடைந்தே
சிற்பத மான வசிபத சிவத்தைச்
சேர்ந்ததற் கங்கமாய் நின்முன்
மற்பத முத்தி முடிந்தது வாகும்
மற்றவை தனினிற்கிற் குறையே.

என்பதனாற் காண்க.

தத்துவமசி யென்னு மகாவாக்கியத்திற்குக் கூடத்த பிரம்ம ஐக்கியமெனப் பொருள் கூறியிருக்க, இங்ஙனம் அங்கலிங்க சையோக மெனப் பொருள் கூறியதேதெனின், ஆகம வேத வுபநிடதங்களைக் கூர்ந்து விசாரியாத மாயாவாதி முதலாயினோர் புத்திமயக்கத்தா லங் ஙனம் பொருள்கோடலே யன்றி, அவ் வாகமவேத வுபநிடதங்களை யுத்தி தர்க்க வனுமானங்களைக் கொண்டு சுருதி குரு சுவானுபவமாக வுணரு மெய்யறிவாளராகிய சைவாசிரியரது கொள்கை அஃதன்று.

சுத்த சாதகம்

(1) கங்கையு மிடைச்சே ரியுமொன் றுக் கொன்று
கைவிட்ட ததுவிட்ட தொக்கு
மிங்ஙனங் குந்த மும்மொரு வனுமற்
றிடைவிடா ததுவிடா தொக்கு
மெங்ஙன மவனு மிவனுமற் றிடைவிட்
டிடைவிடா திருத்தலுங் கூடுந்
துங்கவவ் வசிக்குப் போந்திடு மருத்தந்
தோன்றிடா மறைநெறி யோர்க்கே.

(2) சீவன துபாதி யீசன துபாதி
தீர்ந்துசித் திரண்டது மொன்றே
யாவது விட்டு விடாதலக் கணையென்
றறைந்திடிற் பந்தமோ ரிரண்டு
மேவலை நீங்கல் விட்டலக் கணையாம்
விளங்குஞ்சித் திரண்டது மொன்றே
யாவது விடாத லக்கணை யாகு
மதற்குமே விலக்கணை யின்றும்.

(3) விட்டலக் கணையும் விடாதலக் கணையும்
விட்டுவி டாதலக் கணையுந்
திட்ட மதுறவே தேர்ந்திடிற் பந்தந்
தீர்ந்திடல் விட்டலக் கணையா

மிட்டகல் லதிட்டா னம்மது தானு
யிருத்தலே விடாதலக் கணையா
மெட்டறு சிவத்துக் கங்கமா யிருத்தல்
விட்டுவி டாதலக் கணேயே.

என்பதனுற் காண்க.

ஆதலால், தக்கருபமாகிய பவபந்தங்களை விட்டு நீங்கிச் சிவானந்தானுபூதியைப் பெறவேண்டு மென்னுந் தாகமுடைய வதிபக்குவர் இச் சைவசமய விதிப்படியே சிவபெருமானைப் பூசித்துய்தல் வேண்டுமென ஆகம வேத வுபநிடதங்கள் விசேடித் தெடுத்துக் கூறும். அச் சைவம் நான்கு பிரகாரமாம். அவை சாமானிய சைவம், மிசிரசைவம், சுத்தசைவம், வீரசைவம் என்பனவாம். இவைகளிற் பக்குவால்லாத மந்தாதிகாரிகள் அனுட்டித்துய்தல் காரணமாகச் சாமானியாதி சைவ மூன்றினையும் பூருவபக்கமாகவும், நாலாஞ் சத்திநிபாதராகிய மோக்ஷாதிகாரிகள் அனுட்டித் துய்தல் காரணமாக நான்காவதான வீரசைவத்தை யுத்தரபக்கமாகவுங் கூறியிருக்கின்றன.

### பிரபுலிங்க லீலை

உரைக்குமெச் சமயத் திற்கு முத்தர பாகஞ் சைவந்
தரிக்குமச் சைவத் திற்குத் தரமென வீர சைவம்
தெரிக்குநற் காமி காதி சிரத்தினிற் றிகழுங் கண்டா
யரிக்குழற் சிலம்ப ரற்று மடிமலர்த் தடங்க ணல்லாய்.

### சுத்த சாதகம்

இருக்குமுன் னன்கின் முடிவிலெண் ணன்கா
யிலங்கிடு முபநிட மவையே
வருக்கமு மிரண்டாம் பூருவ மென்றும்
வயங்கிடு முத்தர மென்றுஞ்
சுருக்கம தின்றி யத்தியான் மீகஞ்
சொற்றிடும் பூருவ பாகந்




திருக்குக ளின்றி யங்கலிங் கயிக்கஞ்
 செப்பிடு முத்தர பாகம்.
 என்பதனுற் காண்க.

ஆதலால், "போற்றுசாமானியம் மிசிர சுத்தத்திஞெடு புகழ்வீர மென நான்கதாய் முதன்மூன்று பூருவபக்கமா மதிற் பொலியங்கலிங் கயிக்க மேற்றரு சிவாத்துவித மிசைவீரசைவமதை யெழிலுத் தாபக்க மதனிற் புகலும்" என்றது, இவ் வாசிரியன் தனது திருவடியை யடைந்தவன்போன்ற வறிவீனர்கட்கு அவன் அவளது வென்னு முன்னிலையான் வரும் பிராரத்த போகங்களிலுண்டான ரூபு ருசி திருத்தியினை இஷ்டப் பிராண பாவ இலிங்கங்களுக் கற்பிதஞ் செய் யுந் தவக் கற்பினிறுத்திப் பின்பு அநுபவிக்கும் அச் சிவப் பிரசாதத் தையும் அவ்வங்கலிங்கயிக்கிய நித்திய முத்தி நிரதிசயானந்தத்தையும் அனுக்கிரகிக்குஞ் சாமர்த்தியனுதலால் "கற்பிற்பிரசாத சுகமருள மல" என்றது.

(வி-ரை.) சைவமென்னும்பதத்திற்குப் பொருள் சிவசம்பந்தம். அதாவது அநாதிமுத்தனுகிய சிவத்துடனே ஆதிமுத்தனுகிய வான்மா இரண்டறச் சம்பந்தித்திருக்கை. சித்துச் சடமாகிய சர்வத்திலும் எள்ளுக்குள் எண்ணெய்போலப் பரிபூரணமாக நிறைந் திருக்குஞ் சிவத்தை நாமும் நமது உட்புறம்பாகிய தூலாதி யங்கங் களின் விட்டு நீங்காது இரண்டறச் சையோகமாகச் சம்பந்தித்திருத் தலே சைவம்.

## அத்துவித வெண்பா

சைவஞ் சிவத்துடனே சம்பந்த மாதலென
சைவாக மமுரைக்குஞ் சத்தியங்கேள்—செவ்விதாய்
நீங்காம லுட்புறம்பு நீங்காத நற்சிவனை
நீங்காமை சைவ நினை.

 என்பதனுற் காண்க.

மேற் சிவனுக்கும் ஆன்மாவிற்குமுள்ள சம்பந்தமானது இரு ளுக்கும் ஆகாயத்திற்கு முள்ள சம்பந்தம்போல வெனின், அவை ஒன்றுக்கொன்று பிரயோசனமில்லாது அப்பிரயோசன மாதலாற் பாடாணவாதி முதலாயினேர் சொல்லும் பேதசம்பந்தமும், பொன்

னும பணியும்போல வெனின், அது பெறுவானும் பேறு மில்லாமை யான் மாயாவாதி முதலாயினோர் சொல்லும் அபேத சம்பந்தமும், சொல்லும் பொருளும் போல வெனின், அது நிட்பிரயோசனமாத லாற் சிவாவேசர்முதலாயினோர் சொல்லும் பேதாபேத சம்பந்தமும் ஆம். இங்ஙனம் இச் சமயிகள் சொல்லுஞ் சித்தாந்தங்கள் அவசித்தாந்த மாம். இவ் வவசித்தாந்த சம்பந்தத்தை விட்டு, நின்மலமான திரு வருளுக்கு முதன்மையான சிவத்திற்கும் ஆன்மாவிற்கும், உயிரும் உட லும் போலவும் கண்ணொளியுமாதித்திய வொளியும்போலவும் இரண் டற்ற வத்துவித சம்பந்தமே வுயிர்க்குறுதியான சிவசம்பந்தமாம்.

சிவதருமோத்தரம்

பேதமே லேக தேசி முத்தியிற் பிராணு மேக
வாதமு மயக்கஞ் செய்யு மவினநா சகனு மொன்றே
வாதலா லிரண்டு மல்லா வபேதமே யமல ஞவி
வேதக ரவியுங் கண்ணும் வேறெனு மொன்று மென்னுர்.

அத்துவித வெண்பா

பேத மபேதமல்லாப் பேதாபே தம்மெனவே
யோதுகின்ற நீதி யுவர்ப்புற்றுத்—தீதிலரு
ளத்துவித சைவ மரணெனக்கண் டார்சிவனோ
டத்துவித நீங்கா ரவர்.

என்பவற்ருற் காண்க.

என்னுக்குள் எண்ணெய் போலச் சிவம் எவ்விடத்தினு நிறை வாய்ச் சம்பந்தித்திருப்பது சுருதிப் பிரமாணமும் அநுபவப் பிர மாணமுமாக விருப்பத் துலாதி யங்கங்களிற் சிவலிங்கந் தரித்திருப் பதே சைவம்; அதுவே சிவசம்பந்தமெனப் பொருள் கூறுதல் வழக் கன்றென்னில் அங்ஙனமன்று. அப்படிச் சிவமெவ்விடத்தினு நிறைந் திருப்பதென்று சொல்வது பிரம்மா முதற் பிபீலிகாந்தமான சர்வ சிவசம்பந்தமாக விருக்கின்றது. அதுவன்றியும், வேதாகமங்களில் உட்சமயம் புறச்சமயமாகிய வேறுபாடுகளுங் கூறுது இச் சைவ மொன்றே வழங்கிவால்வேண்டும். அங்ஙனமின்று. இவ் வான்மா பெத்ததசையில் உடலோடு கலந்து இவ் வுடல் தானுய்ப் பிறிபடா

திருக்கையானும், அண்டத்துக் கொத்தது பிண்டத்துக்கு மென்கை யானும், இவ் வுடலுக்கே முந்தச் சிவசம்பந்தம் வேண்டும். இவற்றிற் குப் பிரமாணமுண்டோ வெனின், அண்டத்தலத்திற் றுபரமென்னு மசாலிங்கத்தைத் தாபித்துப் பூசிப்பது போலப் பிண்டத்தலமாகிய தூலாதி தனுத்திரயங்களிலுஞ் சாலிங்கத்தைத் தாபித்துப் பூசிக்க வேண்டு மென்று சாமவேதத்திலும் வாதுளாகம முதலிய வாகமங் களினும் பிரதிபாதித்திருப்பதே பிரமாணம்.

## ருக்வேதம்

ஏதத்து ப்ராஹ்மணம் ரிக் வித்யா :
பவித்ரம்தே விததம் ப்ரஹ்மணஸ்பதே
தஸ்மாத்துபவித்ரம் லிங்கம் தார்யம்
ஶைவமனுமயம்
அதப்த தநூரக்நோ வைஸாமவேத :
ஸம்ஸார வர்ஜித :
தீக்ஷாயாரஹிதஸ் ஸாக்ஷாந்
நாப்னுயால் லிங்கதாரண முத்தமம்
தேவோரக மநுஷ்யாணும்
ஸித்த வித்யாதரோ கணு :
யுக்தந்து ஸர்வவேதானும்
லிங்கதாரண முத்தமம்.

## தைத்ரீயோபநிஷத்

(1) ததேவாநு ப்ராவிஶத்
ததநுப்ரவிஶ்ய
ஸச்சத்யச்சா பவத்
நிருக்தஞ்சா நிருக்தஞ்ச
நிலயஞ்சா நிலயஞ்ச
விஜ்ஞானஞ்சா விஜ்ஞானஞ்ச
ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்

(2) அம்ருதஸ்யதேவதாரணோ பூயாஸம்
ஶரீரம்மே விசர்ஷணம்
ஜிஹ்வாமே மதுமத்தமா
கர்ணாப்யாம் பூரிவிஶ்ருவம்
ப்ரஹ்மண :கோஶோஸி மேதயாபிஹித :
ஶ்ருதம்மே கோபாய
ஆவஹந்தி விதன்வாந

(3) அதப்ததனோர்கநததாமோ அஶ்நுதே
ஶ்ரிதாஸயித்வஹந்தஸ்தத்ஸமாஶத.

(4) யாதே ருத்ரஶிவாதநூ
ரகோரா பாபகாஶினீ
தயானஸ்தநு வாஶந்தமயா
கிரிஶந்தாபி சாகஶிஹி
யாமிஷம் கிரிஶந்தஹஸ்தே
பிபர்ஷ்யஸ்தவே
ஶிவாங்கிரித்ரதாங்குரு.

என்பவற்றாலும்,

அத்துவித வெண்பா

(1) அண்டபிண்ட மென்ன வறியுந் தலமிரண்டி
லண்டர்தொழு தேத்து மரியலிங்க—முண்டாகத்
தாபித்துப் பேருஞ் சராசரம தாகுமெனத்
தாபிக்கு மாகமங்க டாம்.

என்பதனாலும் காண்க.

ஆன்மாக்ஷகார்த்தமாகப் பரமசிவன் அருளே திருமேனியாகக் சொள்ளப்பட்ட லய, போக, அதிகார, சத்தி, யுத்த, பிரவர்த்தராய், சிவன், சதாசிவன், ஈசானுகிய நிட்களம், நிட்களசகளம், சகளரூபமா யுள்ள இஷ்டப் பிராண பாவமென்னும் திருநாமத்தினையுடைய சிவலிங்கங்களைத் தூல,சூக்கும, காரண தேகங்களில் விட்டு நீங்காத

தரித்து, பிராரத்த வழித்தாய் வரப்பட்ட யாதொரு விடயங்களினது ரூபு, ருசி, திருத்தி யென்னு முன்றினையும் பகுத்து, அம் மூவித இலிங்கங்களுக்கும் அற்பிதஞ் செய்து, அச்சிவப் பிரசாதமே புசிக்கும் ஏதுவினனும், விட்டு நீங்காத அவ் விலிங்க சம்பந்த ஏதுவினனும், தத்துவசுத்தி வரும். அதனல் ஆணவசுத்தி வரும். அதனல் ஆன்ம சுத்தி வரும். அதனல் ஆன்ம லாபமான சிவானன்னிய சம்பந்த வாழ்வு கிடைக்கும். ஆகையால், சிவாநந்தச் செல்வத்தைப் பெற வேண்டு மென்னுந் தாகமுடையோர் இவ்வித அங்கலிங்க சையோக வீரசைவத்தையே யடையவேண்டும்.

## அத்துவித வேண்பா

(2) ஆன விலய வதிகார போகமூன்
றூனதனு மூன்றி லவலமறத்—தானினிய
சம்பந்த நீங்காமை சைவமெனு மாகமங்கள்
சம்பந்தஞ் சொல்லுந் தரம்.

என்பதனுற் காண்க.

விபூதி ருத்ராக்ஷங்கள் எங்குந் தாணுய்ப் போக்குவரவற்று நின்ற சிவனது சொரூபம் அன்றோ? அவ் விபூதி ருத்ராக்ஷதாரண சம்பந்தஞ் சைவம் அன்றோ? அதனல் அப் பேறு கிடையாதோ வெனின், அவ் விபூதி ருத்ராக்ஷமென்பவை உட்சமயம் ஆறுக்கும், சரியாதி நான்கு பாதத்தினையுடையோர்க்கும் பொதுவாகையான் அவை மேலான சிவாத்துவிதமென்னு நித்திய முத்தியைக் கொடுக்க மாட்டா. அம் முத்திக்கேதுவாகிய பரிபாகத்தைச் செய்யும். அஃதன்றியும்,ஓர் கன்னிகை யானவள் தரித்திருக்கு மற்றைய ஆபரணங்களெல்லாம் இவள் ஓர் புருடனுக்கு உரியளென்னுஞ் சுதந்தரத்தைக் காட்டமாட்டா. பிரதானமான திருமாங்கல்யமே அச் சுதந்தரத்தைக் காட்டும். அதுபோல், இச் சிவலிங்கதாரண சம்பந்தமே சைவமென்னும் பொருளைக் காட்டுமல்லது மற்றவைகள் காட்டமாட்டா.

## அத்துவித வேண்பா

(3) நீறுடனே கண்டிகைக ணின்றசிவ சம்பந்தப்
பேறதன்றோ வென்னிலது பேசக்கேள்—கூறுகின்ற

மந்திரமுங் கோமயமு மாகிலஞ்சுத் தஞ்செய்ய
வந்ததுபோன் மற்று மதி.

(4) பூண்ட பணிகளது பொற்புடைய நாயகனுக்
கிண்டுரிய ளென்னு திவடன்னை—யீண்டொருவன்
பாரியென மாங்கிலியம் பண்ணுதல்போ லிங்கசங்க
காரணத்தாற் சைவனென்று காண்.

என்பதனுற் காண்க.

சூக்குமதேகத்தில் தாபிக்கும் பிராணலிங்க சம்பந்தம்போதாதோ? தூலதேகத்தினுந் தரிக்கவேண்டுமோ? எனின், ஓராற்று வெள்ளத்தைக் கடக்கக் கருதினோன்தூலதேகத்தால் தெப்பம் பிடித்துக் கடக்க வேண்டு மல்லது, சூக்கும தேகத்திற் பிடித்துக் கடக்கமுடியாதது போல், செனன மாண பிரவாகத்தைக் கடக்கக் கருதினோர்க்கு முன்னர்த் தூலதேகத்திற் சிவலிங்கதாரண சம்பந்தம் வேண்டும்.

(5) தூலமதிற் றெப்பமுறிற் சூக்குமமு மாறேற்றுந்
தூலத்தின் றேற்சூக்கந் தானேரு—தூலத்தி
லிட்டலிங்க நிட்டையுறி லெய்துமன மும்மொன்று
பட்டுவினை நீங்குமெனப் பார்.

என்பதனுற் காண்க.

இனிச் சாமானிய சைவரிலக்கணம் யாதெனின், விபூதி ருத்ராக்ஷ தண்ட கமண்டலமாகிய உபாங்கங்களைத் தரித்து, ஆசாரியரிடத்துச் சமயதீக்ஷையைப் பெற்று. திரிகால வநுட்டானஞ் செய்து, சிவாலயத்தில் திருவலகு திருமெழுகிட்டுப் பாடிப் பணிந்துருகித் தெரிசனஞ்செய்து, இங்ஙனம் யாவராலும் வழிபடப்பட்ட பாார்த்த சிவலிங்கங்களைக் கண்டவிடத்து வழிபட்டு வருவதே யன்றி, தான் வழிபடுஞ் சிவலிங்கம் இது வென வோர் நியமமில்லாது பொதுவாக வழிபடுகை.

(6) மற்றிவர்க்குக் கற்பு மதியிலிங்கங் கண்டவிடத்
தற்றுவழி பாடுசெய்த லேயன்றி—மற்றிதுவே
யென்னுங்கற் பில்லா வியற்கையாற் பேரிவர்க்கு
மன்னுஞ்சா மானியசை வம்.

என்பதனுற் காண்க.

இனி மிசிர சைவரிலக்கணம் யாதெனின், சாமானிய சைவ ரைப் போல் இவருந் தண்ட கமண்டலந் தரித்து, ஆசாரியரிடத்து விசேட தீக்ஷையைப் பெற்று, அவ் வாசிரியரால் தனக்கென வோர் சிவலிங்க மெழுந்தருளப் பண்ணிக்கொண்டு, சௌரமுதற் சண்டே சுராந்தமாக ஆவரண தேவதைகளை யவரவர்க் குரித்தான மந்திரங் களினால் அர்ச்சித்து, பின்பு அம் மூர்த்திகளை யெல்லாந் தான் பூசிக் குஞ் சிவலிங்கத்தோ டொன்றாகக் கூட்டிப் பாவிக்குந் தன்மையினா லும், சிவபூசை யில்லாதவாது கிருகத்தன்னாதிகளைப் புசிப்பதனா னும் இவருக்கு மிசிரசைவரென்று பெயர்.

(7) சவுர முதற் சண்டாந்த மாவரண மெல்லா
மவரவர்தம் மந்திரத்தா லர்ச்சித்—தெவரையுந்தா
னர்ச்சிக்கு நல்லரனே யாமென்னப் பாவிக்குங்
கற்புமிசி ரசைவங் காண்.

என்பதனாற் காண்க.

இனிச் சுத்த சைவரிலக்கணம் யாதெனின், சாமானிய சைவர் மிசிரசைவரைப் போற் சமய விசேஷ தீக்ஷைகளைப் பெற்று, விபூதி முதலிய வுபாங்கங்களையுந் தரித்து, ஆசனமூர்த்தி மூலங்களாற் சௌரமுதற் சண்டேசுராந்தமான பரிவார தேவதைகளை மிசிரமாகக் கலவாமற் பிரித்துப் பூசிக்கும் அதிகாரத்தைப் பெறும் பொருட்டு, ஆசாரியரை வழிபட்டு, அவரால் நிருவாண மென்னுங் கிரியா வுத் திரி தீக்ஷையைப் பெற்று சௌரமுதற் சண்டாந்தமான பரிவார தேவதைகளினது ரூபத்தியானங்களையுஞ் சிவலிங்கத்தினது ரூபத் தியானங்களையுங் குருமுகமாகக் கேட்டறிந்து, அலங்காராசனம், ரதம், நாகபீடம், விமானம், ரிஷபம் ஆகிய இவை முதலிய ஆதனங் களிலேயும், கந்த புஷ்ப முதலிய பூசா திரவியங்களிலேயும், மந்தி ரங் கிரியா பாவனைகளிலேயும், ஒன்றுங் குறையாமல், கருஷணாதி பிரதிஷ்டாந்தம், பிரதிஷ்டாதி யுச்சவாந்தம், உச்சவாதி பிராயச் சித்தாந்தமாகக் காமிகாதியாகம விதிப்படி ஆலயங்களில் பரார்த்த மான சிவலிங்கப் பிரதிட்டை செய்வதுபோல, ஆன்மார்த்த சிவ பூசைக்கும்பூஜாஸ்தானமாகிய மடத்தைக் கருஷணாதியாகச் செய்து, விதிப்படி மண்டப மமைத்து, மத்தியிற் சிங்காசனமிட்டுப் பீடசுத்தி செய்து, அதிற் சாமானியார்க்கியந் தாபித்து, அதனாற் சுத்தி செய்து,

அப் பீடத்தக்கினிபாகத்திற் சூரியனைப் பூசித்து, பூர்வாதி துவாரத்திற் றுவாரபாலரைப் பூசித்து, ஆவரணமாகக் கணபதி, கந்தன், ஸரஸ்வதி, லட்சுமி, நந்தி, மகாகாளர், கங்கை, யமுனை முதலிய தேவதைகளைப் பூசித்து, பின்பு பூதசுத்தியாதி அந்திரியாகத்தைப் பண்ணிக்கொண்டு, பின்பு சுத்தியாயிராநின்ற ஸ்தானவேதிகையிற் பெட்டகத்திலுள்ள சிவலிங்கப் பெருமானை யெழுந்தருளச் செய்து, சுவாகாந்தமாகப் பாத்தியாசமனுர்க்கியங் கொடுத்து, நிருமாலியங் கழித்து, விதிப்படி யபிஷேக திரவியங்களால் அபிஷேகஞ் செய்து, திருவொற்றுடை சாத்தி, வஸ்திராபரணாதி அஷ்ட புஷ்பந் தரித்து, சிங்காசனத்தின்மீது ராஜ வுபசாரமாக மெல்ல இருத்தி, ஆதார சத்திமுதல் உன்மனசத்தி பரியந்தமாகிய சிவாசனங்கொடுத்து, ஈசானாதி பஞ்சவத்திரங்களிலும் அங்கப் பிரத்தியாங்க சாங்க வுபாங்கமாகிய வித்தியாதேகங் கொடுத்து, அவ் வித்தியாதேக மூர்த்தத்துக்கு உயிராகச் சத்ரூப சிவத்தை மூலத்தாலாவாகனாதி யஷ்ட ஸம்ஸ்காரமுஞ் செய்து, மனோன்மனி சத்தியை அஷ்டதள பத்மத்தீசான தளத்தில் ஆவாகனஞ் செய்யுமளவுஞ் சருவஷணாதி பிரதிட்டைசெய்து, பின்பு சுவாகாந்தமாகப் பாத்தியாசமனுர்க்கியங் கொடுத்து, பாவனபிஷேகஞ் செய்து, வஸ்திராபரண கந்த புஷ்ப முதலியவற்றைத் தரித்து, லய போக வதிகாரங்களும் பிரித்துச் சாத்தி, நைவேத்திய, தூப, தீப, நிர்த்த, கீதப் பிரதட்சண, நமஸ்கார, ஸ்தோத்திரப் பிரார்த்தனை முதலியவெல்லாஞ் செய்து, பின்பு நிரோதார்க்கியங் கொடுத்து, அக்கினிகாரிய முதலியவுஞ் செய்து, அவையெல்லாஞ் சிவார்ப்பணஞ் செய்து, பரான்முகங்கொடுத்த சண்டேசுர பூசைபரியந்தம் ஓர் கிரியை. இனி மந்திரக்கிரியா பாவனுலோபங்கள், திரவியலோபங்கள், பூசாகாலத்து மனம் புறவிடயங்களிற் சென்றதனல் வருந்தோஷங்கள் நிரச் செபத் தியானங்கள் செய்தல் பரியந்தம் ஓர் கிரியை. இங்ஙனமாகமங்களிற் கூறிய பிரதமாவரணம், துவிதியாவரணம், திரிதியாவரணம், சதுர்த்தாவரணம், பஞ்சாவரண முதலிய விதிப்படி செய்து வருவதே சுத்த சைவம்.

(8) சொல்லுமுபாங் கஞ்சாங்கஞ் சோர்வறவே தானினிய
நல்லசிவ தீக்கையினு னன்கணிந்து—சொல்லியநற்
பூசைக் கதிகாரம் பொற்புறவா சானருளாற்
பேசியநற் றீக்கையும் பெற்று.

(9) ஆவரண தேவதையு மாஞ்சவுர சண்டாந்த
மாவதுவும் லிங்கமது வாவதறிந்—தாவலுடன்
மந்திரமுந் தந்திரமு முத்திரையு மற்றுமிக
வுந்துமுப சாரமீரெட் டும்.

(10) வாகனமுஞ் சந்து மகிழ்கர்ப்பூ ரம்புழுகு
மாகுமிவை யொன்றிலொன்றின் ரூகாம—லாகுங்
கருஷணை யாதிபிர திட்டையந்த மாதி
வருபிரதிட்டை யுச்சவாந் தம்.

(11) உச்சவம தாதி யுளபிராச் சித்தமந்த
மர்ச்சனைகள் சிங்கா தனமதனி—னிச்சயமா
மாதார சத்திமுத லுன்மனை யந்தமா
மோதியநற் பீடமர்ச் சித்து.

(12) நல்ல வரனை நயந்து சிவாசனத்தின்
மெல்லவி ருத்தி விருப்பினு—லல்லலறப்
பூசித்து மந்திரமே யாதிபொரு ளீருகப்
பேசுமதி லோபமறப் பின்.

(13) சொல்லும்ப்ராச் சித்தமுற்றுஞ் சோர்வறவே பெய்தசுத்தம்
புல்லலறச் சுத்தமாம் பொற்பினு—னல்லபெயர்
சுத்தசைவ மாமிது சொல்லிரண் டாகுமிவைக்
கொத்தபெயர் சொல்வோ முணர்.

மற்றும் வருவனவற்றூற் காண்க.

மாயாகாரியமாகிய இத் தேகங்களைச் சொஸ்திகாரோகண முதலிய தீக்ஷாக்கினியினுற் போக்கி, மந்திர சொரூபமாக்கி, அத் தேகங்களில் நின்மலமாகிய இஷ்டப் பிராண பாவலிங்கங்களைப் பிரசன்ன முகமாய்ப் பரான்முகமின்றிப் பஞ்சாவத்தைகளினும் இவனுடைய வர்ப்பண வவதானங்களைக் கைக்கொண்டனுக்கிரகஞ் செய்து கொண் டெழுந்தருளியிருக்க, மந்திரக் கிரியா வேதா தீக்ஷைகளால் வாதுளாகம விதிப்படி தாபித்து, இவனுஞ் சந்நிதானம் விட்டுப் பிரி

யாமலிருக்கச் செய்வதே வீரசைவஞானசாம்பவதீக்ஷை. ஆயின், இதனைச் சைவமென்னாது வீரசைவமெனப் பெயர் கூறியதியாது காரண மெனின், இது சவுராமுதற் சண்டாந்தமாகப் பலதேவரைப் பூசிக்கும் பேத சைவம் போலல்லாது, கொழுநனை விரும்புங் குலமகட்போல ஆன்மரக்ஷகரான சிவலிங்கப் பெருமானைப் பூசித்துபசரித்துத் தியானித்தலே யன்றி, மற்றொரு தேவரை வழிபடாதிருத்தலான வீரப்பாட்டினை யுடைத்தாதலால், அங்ஙனங் கூறியது. இவ் விஷ்டலிங்க மூர்த்தியைப் பூசிக்குங் கிரமம் யாதோ வெனின், சிவன் சிருட்டியாதி பஞ்ச கிருத்தியங்களை ஈசானாதி பஞ்சமுகத்தால் நடத்தி வருதலால் மந்தாதிகாரிகளான சாமானியாதி சைவர்கள் சௌக்கிய போக பதப் பிராப்திகளை விரும்பினவர்களாதலால், அவர்கள் இரட்சக கிருத்தியத்தைச் செய்யும் பூருவ திக்கான தற்புருடமுகத்தில் எதிர் நில்லாது தென்புறத் தொதுங்கி நின்று, சிருட்டிக் கிரமமாய் ஈசானாதியாக மந்திர உச்சாரணத்தோடு இரத முதலிய பீடத்தில் சிவலிங்கப் பெருமானை எழுந்தருளச் செய்து, ஆவாகனாதி விசர்ச்சனாந்தமாகப் பூசித்து வரவேண்டுமென்று ஆகமங்களிற் பூர்வபாகத்திற் சொல்லிய விதிப்படி பரார்த்தத்தினும் ஆன்மார்த்தத்தினும் சிவம் வேறு தான் வேறாக இருந்து பூசிப்பர். அந்தப் பேதசைவரைப்போலல்லாது, தீவிரதர மோட்சாதிகாரிகளான வீர சைவர்கள் பச்சிம திக்கான அனுக்கிரக கிர்த்தியத்தைச் செய்யுஞ் சத்தியோசாத முகத்தில் எதிராக இருந்து, லயக்கிரமமாய்ச் சத்தியோசாதாதியாக மந்திர உச்சாரணத்தோடு அத்துவிதமாய்க் கரதல பீடத்தில் அங்குஷ்ட பாரிசங் கோமுகமிருக்கச் சிவலிங்கத்தை எழுந்தருளச் செய்து, பூசிக்கவேண்டுமென்று வாதுளாகமம், அசிந்தியாகம முதலிய ஆகமங்களில் உத்தரபாகத்திற் சொல்லிய விதிப்படி பூசிக்கவேண்டும். சாமானியாதி சைவர்களுக்குள்ளும் மோக்ஷாபேட்சையை யுடையவர்கள் பரார்த்தமான சிவாலயங்களில் மேற்குத் துவாரமாகச் சந்நிதானம் அமைத்தும், ஆன்மார்த்தத்துக்கும், மேற்குத் துவாரமாகச் சந்நிதானம் அமைத்தும் சத்தியோசாத முகத்தில் பூசிக்கவேண்டு மென்றும், அச் சிவஸ்தலமெல்லாம் ஞானஸ்தலமென்றும், அவ்வித ஆன்மார்த்த பூசையெல்லாம் ஞான பூசை யென்றும், ஆகமங்களிற் பிரதிபாதித் திருப்பதும், அவ்வாறு நடந்து வருவதும் கண்டுகொள்க. அதிகாரத்தானமாகிய சகளவடிவ இஷ்டலிங்கத்தை விதிப்படி ஜல தைல புஷ்பாதி திரவியங்களால் பூசிக்கின்றனம்;

போகத்தானம், லயத்தானங்களாகிய சகளநிட்களமும் நிட்களமுமாகிய வடிவமுடைய பிராண பாவ லிங்கங்களை யெவ்வாறு பூசிப்பதெனின்,

கணபாஷித ரத்தின மாலை

அட்டவி தங்களினு லிட்டலிங் கத்தை யர்ச்சித்ததை
விட்டக லாதுன்னல் ப்ராணலிங் கார்ச்சனை மொய்த்திலிங்கத்
துட்டன் மனம்லயித் தாற்பாவ லிங்கமி தொள்ளியமா
நிட்டைமெய்ப் பூசை யிதுவாகு மூன்றி னியமங்களே.

என்பதனுற் காண்க. (3)

[இச் செய்யுள் என்னுதலிற்றோ வெனின், தூல சூக்கும காரண தேகங்களில் விளங்கும் இஷ்டப் பிராண பாவ லிங்கங்களே இந்திரிய காணங்களில் ஆசாராதி சடுலிங்கங்களாக விளங்கும் விதியினையும் பத்தன் முதலான அன்பர்கள் பூசித்து அர்ப்பிதஞ் செய்யும் விதிக் கிரமங்களையுங் கூறுவானெடுத்துக் கொண்டருளுதல் நுதலிற்று.]

துங்கமுறு வாதுள விதிப்படிமண் ணுதியாய்ச்
சொல்லங்க மற்றத னெடுஞ்
சுத்தசித்த மதாதி யத்தங்க ளாற்கன்ம
சாதாக்கிய மாதி யவர்க
ளிங்குரைசெய் கிரியாதி சத்திய தனிற்றேன்று
மெழில்கொ ளாசார முதலா
யேற்றமுறு லிங்கம் நிவர்த்யாதி கலையில்வரு
மியலுமாக் கிராண முதலாய்ப்
பங்கமறு முகமதிற் கந்தமுத லாம்பயன்
பழுதில்சற் பத்தியா தியாற்
பகருருவு சுவையமைதி யியல்பறிந் தற்பிதம்
பண்ணிப்பிர சாதங் கொளு
மங்கெழிற் பத்தன்முத லறுவர்வினை யோட்டுவோ
யபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமரசற் குருபரந
லபிடேக மாடி யருளே.

(இ-ள்.) தங்கமுற - மேன்மைபொருந்திய, வாதுளம் - வாதுளாகமத்திற் கூறிய, விதிப்படி - கிரமப்படி, மண்ணுதியாய் - பிருதிவி முதலாக, சொல் - சொல்லப்பட்ட, அங்கமதனெடும் - தேகத்தோடு, சுத்தசித்தமதாதி - சுசித்தமுதலான, அத்தங்களால் - கைகளால், கன்மசாதாக்கியமாதியவர்கள் - கன்மசாதாக்கியர் முதலிய சாதாக்கியரென்னும், இங்குரைசெய் - இவ்விடத்திற் சொல்லப்பட்ட, கிரியாதி சத்தியதனில் - கிரியாசத்தி முதலிய சத்திகளினிடத்து, தோன்றும் - தோன்றிய, எழில்கொள் - அழகைக் கொண்டிராநின்ற, ஆசாரா முதலாய் - ஆசாரலிங்கமுதலான, ஏற்றமுறும் - சிறந்த, லிங்கம் - (மேற்சொல்லிய) இலிங்கங்களுக்கு, நிவர்த்யாதி - நிவர்த்தி முதலான, கலையில்வரும் - கலையினிடமாக இருந்து வரப்பட்ட, கந்த முதலாம் - கந்தமுதலான, பயன் - விடயப் பிரயோசனங்களை, இயலும் - தன்தன் அளவிற்குறைவில்லாத, ஆக்கிராணமுதலாய் - ஆக்கிராணேந்திரியமுதலான, பங்கமற - குற்றமற்ற, முகமதில் - முகத்தினிடமாக, பழுதில் - குற்றமில்லாத, சற்பத்தியாதியால் - சற்பத்தி முதலிய பத்திகளினுலே, பகர் - சொல்லப்பட்ட, உருவு - ரூபு, சுவை - ருசி, அமைதி - திருத்திகளினது, இயல்பு - தன்மைகளை, அறிந்து - தெரிந்து, அற்பிதம் பண்ணி - அர்ப்பிதஞ் செய்து, பிரசாதம் - சிவப் பிரசாதமாக, கொள்ளும் - அநுபவிக்கும், அங்கெழில் - அம் முயற்சியிலழகிய, பத்தன் முதல் - பக்தன் முதலான, அறவர் - அறவர்களுடைய, வினை - ஆகாமிய வினையை, ஒட்டுவோய் - தீர்ப்பவனே, அமலம் - பரிசுத்தமான, முதுகிரியினமர் - விருத்தாசலத்திலெழுந்தருளிய, குமர சற்குருபர - குமாரதேவனென்னுந் திருநாமத்தினையுடைய பரமாசிரியனே, நல் அபிடேகமாடியருளே - அடியேங்கள் செய்யும் நல்ல அபிஷேகத்தைத் திருவுளங் கொண்டருள வேண்டும் (எ-று.)

(ப-ம்.) பிருதிவி யென்னுந் தேகத்தைக் கொண்டு சுசித்தமென்னும் அஸ்தத்தினுற் கன்மசாதாக்கிய மென்னுங் கிரியாசத்தியிற் றேற்றிய ஆசாரலிங்கத்துக்கு நிவர்த்திகலையிலிருந்து வரப்பட்ட கந்த விடயத்தை ஆக்கிராணேந்திரிய முகத்தினிடமாகச் சற்பத்தியினுலே ரூபு ருசி திருத்திகளைப் பிரித்து, அர்ப்பிதஞ்செய்து, அந்தச் சிவப் பிரசாதத்தைப் புசிப்பவனே பக்தன். அப்பு வென்னுந் தேகத்தைக் கொண்டு, சுபுத்தி யென்னும் அஸ்தத்தினுலே கத்ருசாதாக்கிய

மென்னும் ஞான சத்தியிற்ரோற்றிய குருலிங்கத்துக்குப் பிரதிட்டா கலேயிலிருந்து வரப்பட்ட ரசவிடயத்தைச் சிங்குவை யென்னு மிந்திரிய முகத்தினிடமாக நயிட்டா பத்தியினலே ரூபு ருசி திருத்திகளைப் பிரித்து, அர்ப்பிதஞ்செய்து,அந்தச் சிவப் பிரசாதத்தைப் புசிப்பவனே மாயேசுரன். தேயு வென்னுந் தேகத்தைக் கொண்டு, நிராங்கார மென்னும் அஸ்தத்தினலே மூர்த்திசாதாக்கியமென்னு மிச்சாசத்தியிற்ரோற்றிய சிவலிங்கத்துக்கு வித்தியாகலேயிலிருந்து வரப்பட்ட ரூபவிடயத்தைச் சட்சென்னு மித்திரியமுகத்தினிடமாக அவதான பத்தியினலே ரூபு ருசி திருத்திகளைப் பிரித்து, அர்ப்பிதஞ்செய்து, அந்தச் சிவப் பிரசாதத்தைப் புசிப்பவனே பிரசாதி. வாயு வென்னுந் தேகத்தைக் கொண்டு, சுமனமென்னும் அஸ்தத்தினலே அமூர்த்தி சாதாக்கியமென்னும் ஆதிசத்தியிற் ரோற்றிய ஜங்கமலிங்கத்துக்குச் சாந்திகலேயிலிருந்து வரப்பட்ட பரிச விடயத்தைத் தொக்கிந்திரிய முகத்தினிடமாக அனுபவ பத்தியினலே ரூபு ருசி திருத்திகளைப் பிரித்து,அர்ப்பிதஞ்செய்து,அந்தச் சிவப் பிரசாதத்தைப் புசிப்பவனே பிராணலிங்கி. ஆகாசமென்னுந் தேகத்தைக் கொண்டு விஞ்ஞான மென்னும் அஸ்தத்தினலே சிவசாதாக்கிய மென்னும் பராசத்தியிற்ரோற்றிய பிரசாத லிங்கத்துக்குச் சாந்தியாதீத கலேயிலிருந்து வரப்பட்ட சத்தவிடயத்தைச் சுரோத்திரவிந்திரிய முகத்தினிடமாக ஆநந்த பத்தியினலே ரூபு ருசி திருத்திகளைப் பிரித்து, அர்ப்பிதஞ்செய்து, அந்தச் சிவப் பிரசாதத்தைப் புசிப்பவனே சரணன். ஜீவனென்னுந் தேகத்தைக் கொண்டு, சற்பாவமென்னும் அஸ்தத்தினலே மகாசாதாக்கியமென்னும் சிற்சத்தியிற் ரோற்றிய மகாலிங்கத்துக்குச் சாந்தியாதீதோத்தர கலேயிலிருந்து வரப்பட்ட பரிணம விடயத்தை இருதய முகத்தினிடமாகச் சமரச பத்தியினலே ரூபு ருசி திருத்திகளைப் பிரித்து,அர்ப்பிதஞ்செய்து,அந்தச் சிவப் பிரசாதத்தைப்புசிப்பவனே ஐக்கியன். ஆதலால் "துங்கமுறு...பத்தன் முதலறுவர் வினையோட்டுவோய்" என்றது.

பரமரகசிய சடுத்தலம்

தரையங்கங் காஞ்சித்த மதற்குக் கன்ம
சாதாக்கியங் கிரியா சத்தியதற் கென்று
முரைசெயுமா சாரலிங்கங் கலேநிவர்த்தி யதனுக்குற்ற
முகங்கிராண மிகும்பரிம ளத்தை யுவந்தே

வரையறுசற் பத்தியினல் ரூபுருசி நிறைவின்
   வழக்கறிந்து சமற்பணையால் வருசுகந்த சேடம்
புரையறுமன் பினுகர்வோன் பத்த ஞகும்
   பொருவின்மயே சுரனிலேமை புகல லுற்ரும்.

மற்றும் வருவனவற்ருற் காண்க.

(வி-ரை.) பெத்தாவத்தையில் ஆன்மா பிராரத்த போகங்களைப் புசிக்குமிடத்து, இந்திரிய கரணங்களின் முகமாய்ப் புசிக்கும் பழக்க மாதையால் அவை மாயா போகமாயதனுற் பந்த காமிய மேருமல், அவற்றைச் சிவபோக சிவப்பிரசாதமாய்க்கொடுத்து ரக்ஷிக்க வேண்டி, சிவன், சதாசிவன், ஈசனென்னும் லய போக வதிகாராய், நிட்களா, நிட்களசகள, சகளவடிவான தூல, சூக்கும, காரண தேகங்களின் விளங்கும் பாவப் பிராண இஷ்டலிங்கங்களே இந்திரியமைந்து, மனமொன்று, ஆக வாறிடங்களிலும், ஆசாராதி சடுலிங்கங்களாக விளங்கும். அவையாவன:—காரண தேகத்தில் விளங்கும் லயத்தானமாகிய பாவலிங்கமே பிரசாதலிங்கமும் மகாலிங்கமுமாகவும், சூக்கும தேகத்தில் விளங்கும் போகத் தானமாகிய பிராணலிங்கமே சிவலிங்கமும் ஜங்கம லிங்கமுமாகவும், தூலதேகத்தில் விளங்கும் அதிகாரத் தானமாகிய இஷ்டலிங்கமே ஆசாரலிங்கமும் குருலிங்கமுமாகவும் விளங்கும். இந்த வாசாராதி யாறு லிங்கங்களுக்கும் மகாசாதாக்கியர்,சிவசாதாக்கியர்,அமூர்த்தி சாதாக்கியர்,மூர்த்திசாதாக்கியர், கத்துரு சாதாக்கியர்,கன்ம சாதாக்கியரென்று பெயர். இதில் லய போக வதிகார மென்பவை யாவை யெனின், ஆணவ மலத்திற் கட்டுண்டு கிடந்த வான்மாக்களினது துன்பத்தை யறிந்து, அத் துன்பத்தை நீக்கி, அவர்களுக்குத் தனது திருவடி யின்பத்தைக் கொடுத்து, ரக்ஷிக்க வேண்டுமென்றெழுந்த சங்கற்பமே லயம். ரக்ஷிப்பதிப்படி யென்று பகுத்ததே போகம். அப்பகுப்பின்படி யனுக்கிரகிப்பதே அதிகாரம். இந்த லய போக வதிகாரத்துக்கே குரு லிங்க ஜங்கமமென்று பெயர். அவையாவன :—லயமே ஜங்கமம்; போகமே லிங்கம்; அதிகாரமே குரு. ஜங்கமத்துக் கிருப்பிடம் லிங்கம் ; லிங்க வியாபாரம் குரு. ஆதலால், தூலாதி தேகத்தினிடமாக இஷ்டப் பிராண பாவம் மூன்றும், ஆசாராதி ஆறும் ஆகிய நவலிங்கசாயித்திய சம்பந்த பத்தியில்லாதவர்களுக்குக் குரு லிங்க ஜங்கம பத்தியுமில்லை யென்பதாம்.

சச்சிதாநந்தபரனே விலாசார்த்தமாகத் தனது சமவாய சத்தியுடனே கூடிச் சிவமென்றும், ஆன்மாவென்றும் இரு விதமாய், சிவத்திற் சத்தி யென்றும், ஆன்மாவிற் பத்தி யென்றும் இருவிதமாய், சிவம் லிங்கமாகவும், ஆன்மா அங்கமாகவும் ஆயின. இவற்றிற் சத்தி சிவ மாகிய லிங்கத் தலத்தோடு கூடி ஆறு சத்தி, ஆறு கலை, ஆறு சாதாக்கியம், ஆறு லிங்கமாகவும்; பத்தி ஆன்மாவாகிய அங்கத் தலத்தோடு கூடி ஆறு பத்தி, ஆறு அத்தம், ஆறு அர்ப்பணம், ஆறு அவதானமாகவும் ஆயின. மேற்சொல்லிய சமவாயசத்தியினுடைய அந்தர் முகமே சிவம். பகிர் முகமே ஆன்மா. இந்தச் சத்திக்குச் சிவசத்தி யென்றும், அருட் சத்தி யென்றும், ஆநந்தசத்தி யென்றும் பரியாய நாமங்கள் இன்னும் பல வுண்டு. இவற்றில் லிங்கத்தல சம்பந்தமான சத்திவியாபாரமும், அங்கத்தல சம்பந்தமான பத்தி வியாபாரமும் சிறிதெடுத்துக் காட்டுதும். சத்தி வியாபாரமாவது— ஆணவ மலத்தினுன் மறைபட்டு ஒன்றுந் தோன்ருது கேவல மாகக் கிடக்கும் ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளைக் கலையாதி தத்துவங்களால் விளக்கி, மாயா தேக போக சம்பந்தத்தினுலே ஆன் மாக்களுக்கு மலபரிபாகத்தை வருவித்துப் பின்பு பரமசிவனெருவ னுண்டென்று தோன்றச் செய்வித்து, இடைவிடாமற் சிவனை வழி படச் செய்விப்பதாம். இவையெல்லாம் பாதந்திரமே யல்லது வேறில்லையென்று, சுதந்திரமிழந்து நிற்குஞ் சத்திநிபாதர்க்கே பத்தி யுபகரிக்கும். பத்தி வியாபாரமாவது—இருவினையொப்பு, மல பரிபாகம், அந்தக்கரண சுத்தி முதலிய சத்திநிபாதம் பிறந்த வான் மாக்கள் ஞானுசாரியரை யடைந்து, ஞானதீக்ஷையைப் பெற்று, கேட் டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடலான அப்பியாசகாலத்துத் தற்போதஞ் சீவியாது, ஞாதுரு ஞான ஞேயமென்னுந் திரிபுடியுந் தோன்ருதாகிய நின்மல துரியாதீத நிட்டையை விட்டுப் பிரியாமற் சிவாநந்தாநுபூதியிற் றிளைத்திருக்கச் செய்வதாம். சச்சிதாநந்த ஸ்வ ரூப பதியினது சாமர்த்தியத்திற்கே சமவாயசத்தி யென்று பெயர். இனிச் சிவன் ஆன்மாக்கள் செய்யும் பாவ புண்ணியமாகிய ஆகாமிய வினைகளை அத்துவா சம்பந்தமான நிவர்த்தி முதலிய கலைகளினிடத் திற் சஞ்சிதமாக அடைத்து வைத்து, மீண்டுஞ் சிருட்டிகாலத்துச் சுகதுக்கமென்னும் பிராரத்தமாகக் கொடுத்துவருதலால், நிவர்த்தி யாதி கலையிலிருந்து வரப்பட்ட விடயங்களென்று உரை யெழுதப் பட்டது.

உன்னரிய பரன்கிரியை நிவிர்த்திகலை யதனி
னுயர்தருமந் திரமிரண்டாற் புரமொருநூற்றெட்டால்
வன்னமுடி வெழுத்தொன்றால் வரும்பதநா லேழான்
மலரயன்முன் னிலையாக மதித்துயிர்கட் கிதமாய்
மன்னுபுவி தத்துவத்தி னிடமாக மருவி
வருநாசி யுபத்தமதால் வருங்கருமப் பயனை
யந்நிலையே யருத்தியபின் முன்போ லேன்ற
வருவினையை நிவிர்த்தியினி லடைத்திடுமென் றுணரே.

என்பதனாற் காண்க. (4)

[இச் செய்யுள் என்னுதலிற்றோ வெனின், சச்சிதாநந்தமாகிய சொரூபமே ஆன்மாவாகிய நீ என்று தத்துவமசி மகா வாக்கியங்களால் போதிக்கப்படும் வேதாந்த மகா வாக்கிய நிச்சயார்த்தம் கூறுதல் நுதலிற்று.]

தூலமுதலாச் சாக்கிர சொப்பன சுழுத்தியாந்
துரிசகல் வியன்சீ வனே
சொற்றுரிய காலபர வியோமமென வித்துரிசு
தொலைநிமல வறிவாம் பரன்
மாலறுஞ் சொலிதைபிர சாபத்ய புவிசாந்த
மாந்துகளில் சிவமி வர்கடா
மனுதமப் பிரதான காரணியு மோககா
ரணிய மோக காரணி
சிலசத்திக ளாமிம் முப்பா முகன்றுநிகழ்
சிவபர சிவது ரியமாய்ச்
செப்புசற் சிற்சுகம தாகுமது நீயெனத்
திகழுமொரு மொழிவாக் கியமீந்
தாலமர்ந் தடியர்பவ மாலகற் றுறுமதிப
வபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமரசற் குருபரந
லபிடேக மாடி யருளே.

(இ-ள்.) தூலமுதலாம்- தூல சூக்கும காரண தேகங் களிலடையும், சாக்கிரம்- சாக்கிராவத்தை, சொப்பனம் - சொப்பனுவத்தை, சுழுத்தி - சுழுத்தியவத்தை, ஆம் - ஆகிய, துரிசு - குற்றம், அகல் . நீங்கிய, வியன் சீவனே - சீவதுரியனும், சொல் - சொல்லப்பட்ட, துரியம் - பரசாக்கிரம், காலபரம் - பரசொப்பனம், வியோமம் - பரசுழுத்தி, என - என்று சொல்லப்பட்ட, இத்துரிசு - இக் குற்றம், தொலை - நீங்கிய, நிமலம் - பரிசுத்தமான, அறிவாம் - அறிவே வடிவான, பரன் - பரதுரியனும், மாலறும் - மயக்கமற்ற, சொலிதை - சிவசாக் கிரம், பிரசாபத்தியம் - சிவசொப்பனம், புவிசாந்தம் - சிவசுழுத்தி, ஆம் -ஆகிய, துகளில் - குற்றங்கணீங்கிய, சிவம்-சிவதுரியனும், இவர் கடாம் - ஆகிய விவர்கள், மனு - பொருந்திய, தமப் பிரதான காரணி யும் - தமப்பிரதானகாரணியென்றும், மோககாரணி - மோககாரணியென் றும், அமோக காரணி - அமோககாரணியென்றுஞ் சொல்லப்பட்ட, சீலம் - குணம் பொருந்திய, சத்திகளாம் - மாயாசத்திகளான, இம் முப் பாழ் - இந்த மூன்று பாழ்களையும், அகன்று - நீங்கி, நிகழ் - விளங்கிய, சீவன் -சீவதுரியன், பரன்-பரதுரியன், சிவதுரியமாய் - சிவதுரியனுக ஆகி, செப்பு - சொல்லப்பட்ட, சத்து-சத்தும், சித்து-சித்தும், சுகம் - ஆநந்தமும், ஆம் - ஆகிய லக்ஷணமுடைய திருக்கு ஆகும், அது நீ யென - அது நீ யானுயென்று, திகழும் - விளங்காநின்ற, ஒரு மொழிவாக்கியம் - ஒரு மொழி மகாவாக்கியத்தினுல், ஈந்து - அநுக் கிரகித்து, ஆல் - வடவால விருக்ஷத்தின் கீழ், அமர்ந்து - எழுந்தருளி யிருந்து, அடியர் - அடியவர்களது, பவம் - சனனமென்னும், மால் - மயக்கத்தை, அகற்றுறும் - நீக்கியருளுகின்ற, அதிப - பரம கடவுளே? அமலம் - பரிசுத்தமான, முது கிரியினமர் - விருத்தா சலத்தி லெழுந்தருளிய, குமர சற்குருபா - குமாரதேவனென்னுந் திரு நாமத்தினையுடைய பரமாசிரியனே, நல் அபிடேக மாடி யருளே - அடியேங்கள் செய்யும் நல்ல அபிஷேகத்தைத் திருவுளங் கொண் டருளவேண்டும் (எ-று.)

(ப-ம்.) தொம்பத முக்கிய காரியோபாதி யென்னும் வியட்டி தூல சூக்கும காரண தேகாபிமானிகளான விசுவ தைசத பிராக்ஞர் களைக் கொண்டனுபவிக்குஞ் சாக்கிர சொப்பன சுழுத்தி முதலான குற்றங்கணீங்கிய கூடஸ்தனே வியன் சீவனுகிய துரியனுதலால், "தூலமுதலாச் சாக்கிர சொப்பன சுழுத்தியாங் துரிசகல் வியன்

சிவனே" என்றது. தற்பத முக்கிய காரணோபாதி என்னுஞ் சமட்டி தூலசூக்கும காரண தேகாபிமானிகளான விராட்டு இரணியகர்ப்பன் அந்தரியாமிகளைக் கொண்டனுபவிக்குங் காரணோபாதி சம்பந்தமான துரியமாகிற பரசாக்கிரமும், மூன்றுபாதியோடு சம்பந்தமான காலபரமாகிற பரசொப்பனமும், எழுபாதிகளுமடங்கி வாசனை சம்பந்தமான வியோமமென்னும் பரசுழுத்தியும் ஆகிய குற்றங்கணீங்கிய பிரம்மமே அறிவே வடிவான பரனுதலால், "சொற்றுரிய காலபர வியோம மென வித்துரிசு தொலைவிமல வறிவாம்பரன்" என்றது. சீவனது காரியோபாதி என்றும், பரனது காரணோபாதி என்றும், விட்டு நீங்கினுமென்றும் வாசனுபோத ஞானமிருத்தலால், அவ்வாசனுபோத ஞானமே உபாதிரகித சிவனுக்கு உடலாதலால் சிற்சொலிதை யென்னும் அபிமானியைக் கொண்டு விளங்கும் வாசனுபோதஞானமென்னுஞ் சிவசாக்கிரமும், அவ்விடம் விஸ்வந்தோன்றுதெல்லாந் தன்மயமாய்ப் பிரசாபத்தியனென்னும் அபிமானியைக் கொண்டு விளங்கும் விஸ்வக்கிராசமென்னுஞ் சிவசொப்பனமும், இவ்வாசனு விழப்பபிமானியாகிய பொற்புவிசாந்தத்தைக் கொண்டு விளங்கு முபசாந்தமென்னுஞ் சிவசுழுத்தியும், ஆகிய குற்றங்கணீங்கியதே சிவமாதலால், "மாலறுஞ்சொலிதை பிரசாபத்திய புவிசாந்த மாந்துகளில் சிவம்" என்றது. இங்ஙனஞ் சொல்லிவந்த சீவசுழுத்தியாகிய தமப்பிரதானகாரணி என்னுஞ் சீவப்பாழும், பரசுழுத்தியாகிய மோககாரணி என்னும் பரப்பாழும், சிவசுழுத்தியாகிய அமோககாரணி என்னுஞ் சிவப்பாழுமாகிய மூன்று பாழும், சீவதுரியம், பரதுரியம், சிவதுரியமாகிய மூன்று துரியமுந் தோற்றுதற்கு நிலமாக இருத்தலானும், இம் மூன்று பாழையுங்கண்டு கழன்று விளங்கும் சிவதுரியமே சச்சிதாநந்த லக்ஷணமுடைய திருக்குச் சொரூபமாதலானும் "இவர்கடாம் மனுதமப்பிரதானகாரணியு மோககாரணி யமோககாரணி சிலசத்திகளாமிம் முப்பாழகன்று நிகழ் சீவபர சிவதுரியமாய்ச் செப்புசற் சிற்சுகமதாகும்" என்றது. அந்தத் திருக்குச் சொரூபமே நீ யென்று சாமவேத முடிவாகிய தத்துவமசி யென்னு மொருமொழி மகாவாக்கியத்தினு லனுக்கிரகித்தா ரென்பார் "அது நீ யெனத்திகழு மொருமொழி வாக்யமீந்து" என்றது.

(வி-ரை) தத்துவமசி யென்னு மகாவாக்கியார்த்தப்படித் தொம்பத முக்கிய வியட்டி சீவகாரியோபாதியாவது :—ஞானேந்திரியம்

ஐந்து, சத்தாதிவிடயம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, கன்ம விடயம் ஐந்து, மஞதி அந்தக்கரணம் நான்கு, பிராணவாயு ஒன்று, ஆகத் தத்துவம் இருபத்தைந்துமாம். இவை எழு உபாதியாம். அவை யாவன :—தேகம் ஒன்று, இந்திரியங்கள் ஒன்று, அந்தக்கரணங்கள் நான்கு, பிராணவாயு ஒன்று, ஆக வுபாதிகள் எழு. இந்த எழும் மூன்று தேகமாம். அவை: தூலம், சூக்குமம், காரணம், ஆக மூன்று. இவற்றில் மூன்றவத்தையாம். அவை : சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, ஆக அவத்தை மூன்று. இவற்றிற்கு விஸ்வ தைசத பிராக்ஞ னென்று அபிமானி மூன்று. இவற்றில் சிலந்திப் பூச்சி வலை யாகார மாய் நூலினாற் செய்து, அதனடுவே தானிருந்து சுற்றிலும் வரப் பட்ட பூச்சி புழுக்களைச் சென்று பிடித்துத் தான் ஆகாரமாய்க் கொள்ளுதல் போல, சீவனும் புருவ நடுவே நின்று எழுபாதியாகிற வலை யாகாரத்திலே வந்து பொருந்துகிற விடய போகங்களைச் சென்று பற்றிப் புசிக்கும் போது விஸ்வாபி மானியைக் கொண்டு தூல தேகத்தை நடப்பிக்கிறது சாக்கிரம். இந்தச் சாக்கிரத்திலுள்ள எழுபாதியில் தேகம் ஒன்று, இந்திரியங்கள் ஒன்று, ஆக வுபாதி யிரண் டும் நிற்க, அந்தக்கரணம் நான்கு, பிராணவாயு ஒன்று ஆக ஐந்து பாதியோடு கண்டத் தானத்திலே நின்று, சாக்கிரத்திலேறிய விடய வாசனையும் பூர்வஜன்ம வாசனையும், மனோபந்தனையாய் நின்றனுப விக்கும்போது தைசத வபிமானியைக் கொண்டு சூக்கும தேகத்தை நடப்பிக்கிறது சொப்பனம். இந்தச் சொப்பனத்திலுள்ள மனம்புத்தி யகங்காரம் ஆகிய மூன்றும் நிற்க, சித்தம், பிராணவாயு ஆக விரண்டு கருவிகளோடு இதய கமலத்திலே நின்று, வெறும் பாழை யனுபவிக் கும் பிராக்ஞாபிமானியைக் கொண்டு காரணதேகத்தை நடப்பிக்கிறது சுழுத்தி. இச் சுழுத்திக்கு மூலாங்காரமான தமப் பிரதான காரணி யென்றும், முதற்பாழாகிய சீவப்பாழென்றும் பெயர். இங்ஙனங் கூறிய வுபாதிகள், தேகம் மூன்று, அவத்தை மூன்று, அபிமானி மூன்று ஆகிய இவைகளை யெல்லாங் கண்டு கழன்று நீங்கி நின்ற வறிவே தோம்பத லக்ஷியார்த்தமான சீவதுரியன். இந்தத் துரியன் தன்னை மறந்துசீவத்துவம் வகித்துக் கொண்டுநின்ற பழக்கவாசனையி னால் துரியம் விரிந்தாற் சாக்கிரமாயும் குவிந்தால் மாயாவியாத்தமா யும் காரணோபாதி பெந்திப்புடனே நானே பிரம்மமென் றபிமானிக் கையாற் பழைய படியே ஜனன மரணப் படுவன். ஆதலால், தப்பத முக்கிய சமட்டி ஈசுர காரணோபாதிக ணீங்கவேண்டும்.

அந்த ஈசுரகாரண வுபாதியாவது : சர்வஞ்ஞத்துவம், சர்வ காரணத்துவம், சர்வாந்தரியாமித்துவம், சர்வேஸ்வரத்துவம், சர்வசிருட்டித்துவம், சர்வதிதித்துவம், சர்வ சங்காரத்துவம், ஆக வுபாதி ஏழுமாம். இவை மூன்றவத்தையாம். அவை : துரியம், காலபரம், வியோமம், ஆக அவத்தை மூன்று. இவற்றிற் கபிமானி மூன்று. அவை: விராட்டு, இரணியகர்ப்பன், அந்தரியாமி, ஆக அபிமானி மூன்று. இவற்றில் முன் சொன்ன தோம்பத லக்ஷியார்த்தமான துரியமே பரனுக்குடலாகையால் சர்வஞ்ஞத்துவ முதலான ஏழு காரணோபாதி பெந்திப்புடனே விராட்டென்னுஞ் சமட்டி யபிமானியைக் கொண்டு, தோம்பத வியட்டி தூலாபிமானியைப் பிரேரித்துக்கொண்டு, விளங்குகிற துரியமே பரசாக்கிரம். முற்கூறிய ஏழிற் சர்வஞ்ஞத்துவ முதல் நாலுபாதிகணிற்க, சர்வ சிருட்டித்துவம், சர்வதிதித்துவம், சர்வ சங்காரத்துவமென்னு மூன்றுபாதிகளோடு இரணிய கர்ப்பனென்னுஞ்சமட்டி யபிமானியைக் கொண்டு தோம்பத வியட்டிசூக்கும தேகாபிமானியைப் பிரேரித்துக் கொண்டு விளங்குகிற காலபரமே பரசொப்பனம். இனிக் காரணவுபாதிக ளேழு நீங்கி வாசனை பெந்தமாய் அந்தரியாமி யென்னுஞ் சமட்டி யபிமானியைக் கொண்டு தோம்பத வியட்டி காரண தேகாபிமானியைப் பிரேரித்துக்கொண்டு விளங்குகிற வியோமமே பரசுழுத்தி. இதற்கு மகா தத்துவமான மோககாரணியென்றும், இரண்டாம் பாழான பரப் பாழென்றும்பெயர். இங்ஙனஞ் சொல்லிவந்த உபாதி, அவத்தை, அபிமானிகளை யெல்லாங் கண்டு கழன்று நீங்கி நின்று விளங்கிய வறிவே தற்பத லக்ஷியார்த்தமான பரதுரியன். இந்தத் துரியனான பரன் மேற்சொல்லிய காரணோபாதிகளுக்கு உற்பன்ன சத்தியான துரியாதீத வுடலையெடுத்து, உபாதிக ணீங்கினேமென்னும் வாசனை தோஷத்தோடு யானென்னு மமதையுமுடையவனா யிருத்தலால், இவற்கிவ்வாசனை தோஷ மமதைகணீங்கிச் சிவமாக வேண்டுமாதலால், அசிபத சோதனை செய்யவேண்டும்.

## திருமந்திரம்

(1) பண்டை மறைகள் பரம னுடலெனுந்
துண்ட மதியோன் றுரியாதீ தந்தனை
கண்ட பரனுங் காரணோ பாதிக்கே
மிண்டி னவன்சுத்த னாகான் வினவிலே.

என்பதனாற் காண்க.

இனி அசிபத முக்கியமாவது: இங்ஙனஞ் சொல்லிய பரதுரியன் துரியாதீத சிவத்துக்குடலாய் விளங்கு நிலையாம். அதில் மூன்றவத்தை யாம். அவை: சிவசாக்கிரம், சிவசொப்பனம், சிவசுழுத்தி, ஆக வவத்தை மூன்று. இவற்றில் சிற்சொலிதை யென்கிற வபிமானியைக்கொண்டு காரிய காரண வுபாதிகள் விட்டு நீங்கினேமென்று விளங்குகிற வாசனுபோத ஞானமே சிவசாக்கிரம். பிரசாபத்திய னென்கிற வபிமானியைக் கொண்டு சீவேசுர ஜெகத்தென்ப தொன்றுந் தோன்றா தெல்லாந்தன்மயமாக விளங்குகிற விஸ்வக்கிராசமே சிவசொப்பனம். பொற்புவிசாந்த னென்கிற வபிமானியைக் கொண்டு முன் சொன்ன சீவசாக்கிராதி மூன்று, துரியன் ஒன்று, காலபரம் ஒன்று, வியோமம் ஒன்று, பரம் ஒன்று, விஸ்வக்கிராசம் ஒன்று, ஆக எட்டுந் தோன்றாமல், சீவசுழுத்தியான மூலாங் கார மென்னுந் தமப் பிரதான காரணி, பரசுழுத்தியான மகாதத்துவ மென்னு மோககாரணி ஆகிய இந்த விரண்டுமடங்கி, அமோககாரணி சொரூபமாய் மகா மாயையாகிற மூலாஞ் ஞானமாய் நின்று விளங்குகிற உபசாந்தமே சிவசுழுத்தி. இதற்கு அமோககாரணி என்றும் மூன்றாம் பாழான சிவப் பாழென்றும் பெயர்.

(2) காரிய மேழுங் கரந்திடு மாயையுட்
காரண மேழுங் கரக்குங் கடுவெளி
காரிய காரண வாதனை யற்றவப்
பாரண மும்முப சாந்தப் பரிசதே.

தத்துவ ரத்நாகரம்

(1) காரியமேழ் கண்டறு மாயைப் பாழ்விட
காரணமேழ் கண்டறும் போதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமுப் பாழ்விடத் தீருமே.

(2) தத்துவந் தீர்நத பாழுந் தனையறிந் தற்ற பாழு
முத்தமா முபசாந் தத்து முன்னிய மூன்று பாழுந்
தொத்திய மாயை யோடுந் தொல்பரா சத்தி யோடுஞ்
சித்துறுஞ்சிவசத் திப்பாற் றிரிந்தது திரிதல் காண்டி.

என்பதனாற் காண்க.

இங்ஙனஞ் சொல்லிவந்த மூன்று பாழினுக்கும் மூன்று மாயை யிருப்பிடமாகையாலும், இம் மூன்று பாழுமொன்ருய்க் கூடின இடம் உபசாந்தமாகையாலும், இம் மாயாசத்திக ளெம்மட்டுண்டோ வம்மட்டும் பிறப்பைக் கொடுக்கும்.

## திருமந்திரம்

(1) பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் போற்றலே
முத்திக்கு வித்து முதல்வன்றன் பாதமே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானுதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே.

என்பதனுற் காண்க.

ஆதலால், இவைகளையெல்லாங் கண்டு கழன்று நீங்கி நின்ற வறிவே சிவதுரியமென்னுஞ் சச்சிதாநந்த லக்ஷணமுடைய திருக்கா கிய சிவம். இது சூக்கும நினைப்பு மாத்திரமாய் விளங்கும்.

(2) ஒழியா வுபசாந் தமதா யுளதுங்
கழியா விடுகா ரியகா ரணமே
மொழியா விடுமூ வுலகற் றவிடத்
தழியா வுணர்வே சிவமா னதுவே.

என்பதனுற் காண்க.

இந்தச் சிவதுரியன், சிற்சொலிதை பிரசாபத்தியன் பொற்புவி சாந்தன் ஆகிய மகாவபிமானிகளாய் வாசனுவுபாதிகளோடுங் கூடின போது அசிபத முக்கியார்த்தனென்றும், இவைகளைவிட்டு நீங்கின போது அசிபத லக்ஷியார்த்தனென்றும் சொல்லப்படுவன். ஒரு வன் மூன்று தேசத்தில் மூன்று பேரும், மூன்று வேடமுமாக விருந்து, அவன் ஊரும் பேரும் வேடமும் போக, மூன்றிடத் திலு மிருந்தவ னொருவனே யானுற்போல, சீவதுரியன் பாதுரியன் சிவதுரியன் ஆகிய மூன்று துரியனு மொருவனேயாம். அதெப் படி யெனின், சீவன் பானுய், பரன் சிவமாய், உபாதிகள் தீர்ந்த இடத்தி லொன்றேயாம். மூன்று பாழான மூன்று மாயையு மில்லா விடத்தில் மூன்று விதமான துரியனுமில்லாமலொன்ருய்த்திருக்குச் சொருபமான சித்தாம். இது முன் சொல்லிய மாயா திரிசியத்

தாலே மூன்று துரியனுய் விளங்கி இத் துரியனுகிய சித்துப் பேதங்க ணீங்கிய விடத்து ஆநந்தமாம். அப்போது இம் மூன்றுருவந் தோன் ருமலெல்லா மாநந்தமா யுடம்பு முதலிய வெல்லா மறந்து அவ் வாநந் தத்திற் கரைந் தெல்லா மாநந்தமயமாய் விளங்கும்.

தத்துவ ரத்நாகரம்

சீவன்றன் முத்தி யதீதம் பரமுத்தி
யோதுப சாந்தஞ் சிவமுத்தி யாநந்த
மூவயின் முச்சொரூ பமுத்தி யுமுப்பா
லோவுறு தாரத்தி னுள்ளுணர் வானதே.

மெய்ம் மொழி

மத்தமாம்புலன் மாறிய விடத்தே
மன்னுயிர் வெளிப்படு மதுபோய்ப்
பெத்தமாமுயிர் மாறிய விடத்தே
பெரியநற்பரம் வெளிப்படு மதுபோ
யத்தமாம்பர மாறிய விடத்தே
யமலநற்சிவம் வெளிப்படு மதுபோய்ச்
சுத்தமாஞ்சிவ மாறிய விடத்தே
தோன்றிடுஞ் சுயம்பிர காசம்.

என்பதனுற் காண்க.

சீவன்முத்தி யதீதத்தில்; பரமுத்தி உபசாந்தத்தில்; சிவமுத்தி ஆநந்தத்தில்; இந்த மூன்றிடத்திலு முத்தி யான மூன்று துரியனி லும் இம் மூன்று துரியனுக்கும் அப்பாலா யிருக்கிற வாநந்தத்திலும் —கோவைப் படுத்தினமணி கழல, அம் மணி கழன்று போனவிடத் திற் சரடொன்றுமே விஞ்சி நின்ருற்போல—தொடர்ந்து நின்று விஞ்சி நின்றது சத்து. இந்தச் சத்து சித்து ஆநந்தமான திருக்குச் சொரூபமே ஆன்மாவாகிய நீ யென்று ஆசாரியர் தத்துவமசி மகா வாக்கியத்தாற் போதிப்பர். இங்ஙனம் வேதாந்த மகாவாக்கிய நிச்சயார்த்தங் கூறியதாம். (ரு)

[இச் செய்யுள் என்னுதலிற்ரோ வெனின், சிவசிவைக்யத்துக் குப் பூர்வபக்ஷிகள் கூறும் உதாரணத்தை யொப்பாது, உண்மையான சிவசிவைக்ய மித்தன்மைத் தென்பதைக் கூறுவானெடுத்துக் கொண் டருளுதல் நுதலிற்று.]

ஓதரிய சகுணநிர்க் குணசகச நித்திய
மொப்பறு மயிக்க நான்கா
வுண்மைத் தவத்தர்க ளுரைத்திடுவ ரியாதென்னி
லுறுபா லினிற்ரோ யமுஞ்
சீதமுறு பாலினிற் பாலுஞ் சலத்தினிற்
றிகழுப்பு மளவி யதுபோற்
சிற்பர சிவத்தினிற் சீவர்க் கயிக்கியஞ்
செப்புவர்கள் பால தனினீர்
பேதமுற வண்ணம் பிரித்திடும் பாறனொடு
பேசிடி னிரட்டித் திடும்
பிரிவிலப் பதனினுப் பொன்ருய்க் கலக்கினும்
பேதமுறு முண்மை யலவென்
ருதரவு கண்டுருசி போனித்ய மெனுமைய
வபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமரசற் குருபரந
லபிடேக மாடி யருளே.

(இ-ள்.) ஓதரிய - சொல்லுதற்கரிய, சகுணம் - சகுண மென்றும், நிர்க்குணம் - நிர்க்குணமென்றும், சகசம் - சகசமென் றும், நித்தியம்-நித்தியமென்றும், ஒப்பறும் - ஒப்பில்லாத, அயிக்கம்- (சிவேசுரர்க்குச் சொல்லப்படும்) ஐக்யம், நான்கா - நான்கு வகைப் படுமென்ற, உண்மைத் தவத்தர்கள் - தத்துவமுணர்ந்த தபோதனர் கள், உரைத்திடுவர் - சொல்லுவார்கள், யாதென்னில் - (இவற்றிற்கு உதாரணம்) யாதென்ருல், உறு - மிகுதியாகிய, பாலினில் - பாலில், தோயமும் - நீரும், சீதமுறு - குளிர்ச்சிபொருந்திய, பாலினில் - பாலில், பாலும்—, சலத்தினில் - நீரில், திகழ் - விளங்குகின்ற, உப்பும்—, அளவியதுபோல் - கலந்ததுபோல், சிற்பர சிவத்தினில் - பரமசிவத்தில், சீவர்க்கு—, அயிக்கம் - ஐக்யமுண்டாமென்று,

செப்புவர்கள் - (பூர்வபக்ஷிகள் முறையே மூன்றுஉதாரணம்)சொல்லு வார்கள், பாலதனில் - பாலிலிருந்து, நீர் - நீரை, பேதமுற - வேற்றுமைதெரியும்படி, வண்ணம் - (அவற்றின்) நிறம், பிரித்திடும் - வேருகப் பிரித்துவிடும், பால்தன்னெடு - பாலுடன் (பாலின் ஐக்யத்தை), பேசிடின் - சொல்லுமிடத்து, இரட்டித்திடும் - (அவை கூடி) இரண்டத்தனை யளவாகிவிடும், பிரிவில் - பிரிவுபடாத, அப்பதனின் - நீரில், உப்பு—, ஒன்ருய்க் கலக்கினும் - ஒன்ருய்க் கலந்தாலும், பேதமடையும் - (சுத்தநீரும் உப்புநீரும் ருசியால்) வேற்றுமை யடையும், உண்மையல - (ஆதலால், இம் மூவகை ஐக்யமும்) உண்மையான ஐக்யங்களல்ல, என்று - என்றுரைத்துப் பிறகு, ஆதாவு - நாம் ஒப்புக்கொண்டது, கண்டுருசி போல் - கற்கண்டும் (அதனுடைய) ருசியும் போல் (விளங்குகின்ற), நித்யம் - (உண்மையாகிய) நித்ய ஐக்யமாம், எனும் - என்று உபதேசித்தருளிய, ஐய - பெரியோனே, அபிடேகமாடியருள் - அபிஷேகஞ் செய்துகொண்டருள வேண்டும், அமலம் - பரிசுத்தமான, முதுகிரியினமர் - விருத்தாசலத்தி லெழுந்தருளிய, குமர சற்குருபர - குமாரதேவ னென்னும் திருநாமத்தினை யுடைய பரமாசிரியனே, நல் அபிடேக மாடியருள் - (அடியேங்கள் செய்யும்) நல்ல அபிஷேகத்தைத் திருவுளங்கொண் டருளவேண்டும் (எ - று.)

(ப - ம்.) சகுண ஐக்யம், நிர்க்குண ஐக்யம், சகச ஐக்யம், நித்ய ஐக்யமென நான்கு வகையாகச் சொல்லப்படுமென்பார், “ ஓதரிய சகுண நிர்க்குண சகச நித்திய மொப்பறு மயிக்க நான்கா ” என்ருர். சகுண ஐக்யத்துக்கு உதாரணம் பாலிற் கலந்த நீரும், நிர்க்குண ஐக்யத்துக்கு உதாரணம் பாலிற் கலந்த பாலும், சகச ஐக்யத்துக்கு உதாரணம் நீரிற் கலந்த உப்புமாம் ; இவை பூர்வபக்ஷிகள் கூறும் மூன்று வகை ஐக்யங்களுக்கு அவர்கள் கூறும் உதாரணங்களாம் என்பார், “ உறு பாலினிற் ருேயமுஞ் சீதமுறு பாலினிற் பாலுஞ் சலத்தினிற் றிகழு முப்பு மளவியது போற் சிற்பர சிவத்தினிற் சீவர்க்கயிக்கஞ் செப்புவர்கள் ” என்ருர். சுத்த பால் மிக்க வெண்ணிறமாகவும், நீர்சேர்ந்த பால் மங்கலான நிறமாகவும் இருத்தலின், பாலில் நீரினது ஐக்யம் உண்மை யன்று ; பாலிற் பால் சேர்ந்தால் அளவி லிரட்டித்தலின், பாலிற் பாலின் ஐக்யமும் உண்மை யன்று; நீரில் உப்பு நிற பேதமும் இரட்டித்தலு மின்றி யொன்ருய்ச் சேர்ந்தாலும், இனிப்பான நீரை உப்புருசி யுள்ளதாகச் செய்து, தனது வேற்றுமையான இருப்பை

விளக்கி விடுகின்ற தாதலின், நீரில் உப்பின் ஐக்யமும் உண்மையன் றென்பார், "பாலதனி னீர்பேதமுற வண்ணம் பிரித்திடும் பாற ஞெடு பேசிடி னிரட்டித்திடும் பிரிவிலப்பதனினுப் பொன்ருய்க் கலக்கினும் பேதமுறு முண்மையல" என்ருர்.

ஆகவே, ஒப்புக்கொள்ளத் தகுந்தது நான்காவதாகச் சொல்லப் பட்ட உண்மையான நித்ய ஐக்யமாம்; அதற்கு உதாரணம் கற்கண் டும் அதனுடைய உருசியுமாம் என்பார், "ஆதரவு கண்டுருசிபோ னித்யம்" என்ருர். (6)

[இச் செய்யுள் என்னுதலிற்ரோ வெனின், ஆசாரியாபிஷேகஞ் செய்யு முறைமை உணர்த்துதல் நுதலிற்று.]

இன்பமுறு திலநெய்மா மஞ்சளா மலகமா
 னெழில்பஞ்ச கௌவிய மாடி
யியல்புறு பஞ்சாமிருத மிழுதுபா றயிர்தேனொ
 டிக்குநற் சாரு டியே
பொன்புரை வருக்கைமாக் கதலிமுக் கனியாடி
 புகல்விளங் கனிபு மாடி
பொருவிலெலு மிச்சைநா ரத்தைதம ரத்தைபொம்
 பலமாசு நற்கு ளஞ்சி
வன்பிலிள நீர்வெநீர் புனுகுரோ சனைசொர்னம்
 வலசங்கி னுதக மாடி
வனைகடம் பைக்கோடொ டேகமா யிரதாரை
 வடிபனீர் பூதி யாடி
யன்பிற் கலந்தவா ரக்குழம் பொடுதபன
 வபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமாசற் குருபாந
 லபிடேக மாடி யருளே.

(இ-ள்) இன்பம் உறு - இனிமையுள்ள, திலநெய் - எண் ணெய்க் காப்பும், மா - மாக் காப்பும், மஞ்சள் - மஞ்சட் காப்பும், ஆமல கம் - நெல்லிக் காப்பும், ஆன் - பசுவினுலுண்டான, எழில் - அழகிய, பஞ்சகௌவியம் - பஞ்ச கௌவியமும், ஆடி - அபிஷேகஞ் செய்த

கொண்டு, இயல்புறு - நன்மைமிகுந்த, பஞ்சாமிருதம் - பஞ்சாமிருத மும், இழுது - நெய்யும், பால் - பாலும், தயிர் - தயிரும், தேனொடு - தேனும், நல் - நல்ல, இக்குசாறு - கருப்பஞ்சாறும், ஆடி - அபி ஷேகஞ் செய்துகொண்டு, பொன்புரை - பொன்னிறம் போன்ற (நிறமுடைய), வருக்கை - பலாப்பழம், மா - மாம்பழம், கதலி - வாழைப் பழம், முக்கனி - (ஆகிய) முக்கனிச்சாறும், ஆடி - அபிஷேகஞ்செய்து கொண்டு, புகல் - சொல்லப்பட்ட, விளங்கனியும் - விளாங்கனியும், பொருவில் - ஒப்பற்ற, எலுமிச்சை - எலுமிச்சம் பழச்சாறும், நாரத்தை - நாரத்தம் பழச்சாறும், தமரத்தை - தமரத்தம் பழச் சாறும், பொம்பலமாசு - பொம்பலமாசு பழச்சாறும், நல் - நல்ல, குளஞ்சி - குளஞ்சிப் பழச்சாறும், வன்பு இல் - மிருதுவான, இள நீர் - இளநீரும், வெநீர் - உஷ்ணோதகமும், புனுகு - புனுகோதகமும், ரோசனை - கோரோசனோதகமும், சொர்னம் - ஸ்வர்ணோதகமும், வலசங்கின் உதகம் - வலம்புரிச் சங்கோதகமும், ஆடி - அபிஷேகஞ் செய்துகொண்டு, வனை - அலங்கரித்த, கடம்பைக்கோடு தாரை யொடு - கடம்பைக் கோட்டுத்தாரையும், ஏகம் தாரை - ஏக தாரை யும், ஆயிரதாரை - ஆயிரதாரையும், வடி - வடிகட்டின, பனீர் - பன்னீரும், பூதி - பஸ்மோதகமும், ஆடி - அபிஷேகஞ் செய்து கொண்டு, அன்பில் - அன்புடன், கலந்த - கலக்கின, ஆரக்குழம் பொடு - சந்தனக் குழம்பும், தபனம் - மஹாஸ்தபனகலஶஜலமும், அபிடேகமாடியருள் - அபிஷேகஞ் செய்துகொண்டருள வேண்டும், அமலம் - பரிசுத்தமான, முதுகிரியின் அமர் - விருத்தாசலத்திலெழுந் தருளிய, குமர சற்குருபர - குமாரதேவனென்னும் திருநாமத்தினை யுடைய பரமாசிரியனே, நல் அபிடேகம் ஆடியருள் - (அடியேங்கள் செய்யும்) நல்ல அபிஷேகத்தைத் திருவுளங் கொண்டருள வேண் டும் (எ - று.)

(ப - ம்) எண்ணெய் ஸ்நானம் எல்லார்க்கும் இன்பந் தருவது போல் ஈசனுக்கும் இன்பந் தருவதா மென்பார், "இன்பமுறுதில நெய்" என்றார். பசுவினிடத் துண்டாகிய பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்னும் பஞ்ச கௌவியத்தி லொவ்வொன்றும் அதன் காரியமாகிய ஒவ்வொரு பொருளும் உண்டும், பூசியும், வேறு வகையாக உபயோகித்தும் வருபவர்க்கு அழகுண்டாம் என்பார், "எழில் பஞ்ச கௌவியம்" என்றார். பஞ்சாமிருதம் இரண்டு

வகைப்படும். அவை இரச பஞ்சாமிருதம், பலபஞ்சாமிருதம் என்பன. பால், தயிர், நெய், தேன், சர்க்கரை ஆகிய இவ் வைந்தையும் சேர்ப்பின் இரசபஞ்சாமிருத மெனப்படும். பலாப்பழம், வாழைப்பழம், தேங்காய்த் துருவல், கருப்பஞ் சாறு, தேன் ஆகிய இவ் வைந்தையும் சேர்ப்பின் பலபஞ்சாமிருத மெனப்படும்.

பஞ்ச கௌவியம் - பால், தயிர், நெய், கோசலம், கோமயம்.

மாக் காப்பு - அரிசிமாக் காப்பாம்.

பாலபிஷேகஞ் செய்தோர்க்குச் சத்துரு நாசமாகும்.

தயிரபிஷேகஞ் செய்தோர்க்குப் புத்திரப்பேறுண்டாகும்.

நெய்யபிஷேகஞ் செய்தோர்க்கு மோக்ஷமுண்டாகும்.

கோசலமபிஷேகஞ் செய்தோர்க்குச் செல்வமுண்டாகும்.

கோமயாபிஷேகஞ் செய்தோர்க்கு வியாதி நீங்கும்.

அரிசிமாக் காப்பபிஷேகஞ் செய்தோர்க்குத் தானிய விருத்தியு மலநிவாரணமு முண்டாகும்.

நெல்லிக் காப்பபிஷேகஞ் செய்தோர்க்குச் செல்வமும் ரோக நிவாரணமு முண்டாகும்.

மஞ்சட்காப் பபிஷேகஞ் செய்தோர்க்குச் சகல சம்பத்தும் ராஜ வசியமுமுண்டாகும்.

தாரை என்பது கடம்பைக்கோடு, ஏகம், ஆயிரம் என்னும் மூன் ளூடும் கூட்டப்பட்டது. இது கடைநிலேத்தீவகம்.

## விதிப்படி செய்யும் சிவாலய அபிஷேக திரவியங்களின் வரிசைக் கிரமம்

1. சுகந்த தைலம்
2. மாப் பொடி
3. மஞ்சட் பொடி
4. திருமஞ்சன திரவியம்
5. நெல்லி
6. பால்
7. பஞ்ச கவ்வியம்
8. தயிர்
9. ரச பஞ்சாமிருதம்
10. பல சாரம்
11. ஸம்யுக்த பஞ்சாமிருதம்
12. பலோதகம்
13. பீஜோதகம்
14. இரத்தினோதகம்
15. சுகந்தோதகம்
16. புஷ்போதகம்
17. தூர்வோதகம் (தூர்வம்-அருகு)
18. வில்வோதகம்
19. நறுநெய் (பசு நெய்)

20. உஷ்ணோதகம்
21. அன்னுபிஷேகம்
22. ஜலார்ச்சனம்
23. தேன்
24. இளநீர்
25. கருப்பஞ்சாறு
26. குசோதகம்
27. தாராபிஷேகம்
28. சங்காபிஷேகம்
29. கோசிருங்கம் (கடம்பைக் கோடு)
30. விபூதி
31. சந்தனம்
32. பன்னீர்
33. மஹாஸ்தபனம்
34. அர்க்யாபிஷேகம்

பிறகு :
மந்திரான்னம்
நீராஞ்சனம்
கர்ப்பூரதீபம்

கவனிப்பு :—வீரசைவர்க்குரிய அபிஷேகக் கிரமம் இனி வெளி வரும் வீரசைவ சிவபூஜா விதியென்னும் நூலிற் காண்க. (7)

[இச் செய்யுள் என்னுதலிற்றோ வெனின், வீரசைவபக்த மாதுசிரோமணிகளுக்கு அருளிய திருவிளையாடலின் பெருமையை உணர்த்துதல் நுதலிற்று.]

கொந்தியற் சோலைசூழ் கோளூ ரமர்ந்தகோட்
கூச்சௌவை கொழும துரபாற்
குறையிரங் தூட்டவுண் டருடந்த திருமேனி
கோதிலம் மௌவைய வள்பா
லுந்தியடை யாதுகைம் மகவா யமர்ந்துமுலை
யுண்டருள்செய் திருமே னிபின்
புரியபரி வளிகையூர் வைசௌவை புதலையூ
ருற்றநிம் மௌவை கௌரி
புந்திமகி ழறுசுவையி னனமன்பி னுணவூட்டு
பொருவிறிரு மேனி யடியேன்
புன்மலங் கெடவடிமை கொண்டுமுடி யடிசூட்டு
பொன்னருட் டிருமே னியோ
ரந்திபக லுந்தொண்டர் புந்தியம ருந்தலைவ
வபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமரசற் குருபரந
லபிடேக மாடி யருளே.

(இ - ள்) கொந்து - பூங்கொத்துகள், இயல் - ஒழுங்காக நிறைந்துள்ள, சோலை - தோப்புகள், சூழ் - சூழ்ந்த, கோளூர் - கோளூரில், அமர்ந்த - வசித்திருந்த, கோட்கூச் சௌவை - கோட்கூச்சம்மையார், கொழும் - திரளக் காய்ச்சின, மதுர பால் - மதுரமுள்ள பாலை, குறையிரந்து - மன்றாடிவேண்டி, ஊட்ட - உண்பிக்க, உண்டு அருள் தந்த - திருவமுதுண்டருளிய, திருமேனி - திவ்யஸ்வரூபியே, கோது இல் - குற்றங்கணீங்கிய, அம்மவ்வையவள் பால் - அம்மவ்வையாரிடத்து, உந்தியடையாது - அவர் வயிற்றில் கருவாகச் சேராமலே, கைம்மகவாய் அமர்ந்து - கைக்குழந்தையா யெழுந்தருளி, முலையுண்டருள்செய் - திருமுலைப்பாலுண் டருளிய, திருமேனி - திவ்யஸ்வரூபியே, பின்பு—, உரிய - போற்றுதற்குரிய, பரிவளிகையூர் - பரிவளிகையூரில் (வசித்திருந்த), வைசௌவை - வைசவ்வையாரும், புதலையூருற்ற - புதலையூரில் வசித்திருந்த, நிம்மௌவை - நிம்மவ்வையாரும், கௌரி - கௌரியம்மையாரும், புந்திமகிழ் - மனமகிழ்ச்சியுடன், அறுசுவையின் - ஆறுவிதமான உருசியுள்ள, அனம் - அன்னத்தை அன்பின் - அன்புடன், உண - உண்ணும்படி, ஊட்டு - திருவமுது செய்வித்த, பொருவில் - ஒப்பற்ற, திருமேனி - திவ்யஸ்வரூபியே, அடியேன் - அடியவனுகிய எனது, புன்மலம் - இழிவான மும்மலங்களும், கெட - அழிய, அடிமைகொண்டு - அடியேனை ஆட்கொண்டு, முடி - தலையின்மீது, அடி சூட்டும் - திருவடியைச் சாத்தியருளிய, பொன் - பொன்னிறம் போன்ற, அருள் திருமேனி - கிருபாமூர்த்தியே, ஓர் - ஒவ்வொரு, அந்தி பகலும் - நாளும், தொண்டர் - சிவபக்தரது, புந்தியமரும் - மனத்தில் குடிகொண்டிருக்கும், தலைவ - இறைவனே, அபிடேகமாடியருள் - அபிஷேகஞ்செய்து கொண்டருளவேண்டும், அமலம் - பரிசுத்தமான, முதுகிரியினமர் - விருத்தாசலத்தி லெழுந்தருளிய, குமர சற்குருபர - குமாரதேவனென்னும் திருநாமத்தினையுடைய பரமாசிரியனே, நல் அபிடேகம் ஆடியருள் - (அடியேங்கள் செய்யும்) நல்ல அபிஷேகத்தைத் திருவுளங்கொண்டருளவேண்டும் (எ - று.)

(ப - ம்) கோட்கூச்சௌவை—இவ்வம்மையாரின் தாய் தந்தையர் தினந்தோறும் திரளக் காய்ச்சின பாலை அவ்வூரிலுள்ள தேவாலயத்திலுள்ள சிவலிங்க மூர்த்திக்கு நைவேத்தியம் செய்வது வழக்கம். ஒருநாள் தாயும் தந்தையும் வேறூர் ஊருக்குப் போக நேரிட்டபடியினுல்,

மகளைத் தேவாலயத்துக்குச் சென்று, பாலை நிவேதனஞ் செய்யும்படி திட்டஞ்செய்து சென்றனர். இந்த அம்மையார் பாலை நிவேதனஞ் செய்வதென்றால் கடவுளுக்குப் பாலை யூட்டுவதென்று நினைத்து, இலிங்க மூர்த்தியின் சந்நிதியில் பாலை வைத்துக் குடியென்று சொன்னார். சிவலிங்கமூர்த்தி பாலைக் குடியாதிருக்க, அம்மையார் கதறி வருந்தி, உபசார வார்த்தைகளை எம்மட்டுச் சொல்லலாமோ வம்மட்டும் சொல்லி, நானுவிதமான பிரயத்தனஞ் செய்ததன்மேல் சிவலிங்க மூர்த்தி நிமிர்ந்து பாலைக்குடித்தார். இவ்வாறு அம்மையார் தாய் தந்தையர் ஊருக்குத் திரும்பி வருமளவும் தினந்தோறும் நடத்திவந்தனர். தந்தை வந்து இதனைக் கேட்டு, "மகளே! பாலைச் சிவபெருமான் குடிப்பதுண்டோ? நீ பொய் பேசுகிறாய்." என்று அம்மையாரைப் பயமுறுத்த, அம்மையார், "நான்காண்பிக்கின்றேன்; பாரும்." என்று தந்தையை அழைத்துக்கொண்டு சிவாலயத்துக்குச் செல்ல, அங்கு அந்நாள் சிவபெருமான் பாலைக் குடியாதிருக்க, தந்தை வெகுண்டு அம்மையாரைஅடித்தார். கடைசியில் சிவபெருமான் அம்மையாரின் பக்தியை மெச்சித் தன்னிடம் ஐக்யஞ்செய்து கொண்டார். இப்பொழுதும் அவ் விலிங்க மூர்த்தியில் அவர் தலைமயிர் குறியுள்ள ஒரு கரு நிறமான துண்டு உருவம் இருப்பதாகத் தெரிகிறது.

கோளுரென்பது ஐதராபாத்தைச் சேர்ந்த குல்பர்கா டிஸ்ட்ரிக்ட் ஷஹபுர தாலூகாவிலுள்ளது.

அம்மேளவை—இவ்வம்மையார்க்குப் பெஜ்ஜமஹாதேவியென்று மற்றொரு பெயருண்டு. இவ் வம்மையார் சிவனுக்குத் தாயில்லை யென்னும் புராணகதையைக் கேட்டு, சிவபெருமான் ஏழையராய் மிகுந்த துன்பம் அடைவாரென்று மிகவும் துயரமடைந்து, தாமே தாயாகி, அவரை வளர்ப்பதாக யோசித்துக் கொண்டிருக்க, சிவபெருமானே (இலிங்கமூர்த்தியே) குழந்தையாய் எழுந்தருளினார். இந்தச் சிவபெருமானையே அம்மவ்வையார் குமாரனென்று கொண்டு சந்தோஷப்பட, முலைப்பால் சுரக்க, குழந்தைக்கு அதனை யூட்டி அனேக விதமான உபசாரங்களினால் குழந்தையைக் காப்பாற்றினார். இந்தக் குழந்தைக்கு ஒரு நாள் வியாதி யுண்டாயிற்று. அம்மையார் மனம் வருந்தி, அதற்கு ஔஷதம் சித்தஞ்செய்ய வேண்டுமென்று யோசித்தனர். பயனில்லாமற் போயிற்று. கடைசியில், அம்மையார், "நான் இந்தக் குழந்தை துன்பப்படுவதைப்

பார்க்கமாட்டேன். நானே சாகவேண்டும்." என்றனர். அம்மை யாரின் வீரபக்தியைச் சிவபெருமான் புகழ்ந்து, வியாதியில்லாதவர் போல நடித்தார். அம்மையார் சந்தோஷ மடைந்தனர். சிவபெருமான் அம்மையாரை நோக்கி, "உனக்கு என்ன வரம் வேண்டும்; கேள்." என்று கேட்க, அம்மையார், "நீ சுகப்பட்டதே போதும்." என்றனர்.

வைசௌவை—பரிவளிகை என்னும் ஊரில் நேமி செட்டியென் றொரு ஜயின வர்த்தகனிருந்தான். இவன் மனைவி வைசவ்வையார். இவன் ஜயினர்களுக்குத் திருப்தி செய்யவேண்டு மென்று கருதி, வேண்டுமான ராஜபோஜனம் சமையல்செய்யச் சொல்லி, போஜ னஞ் செய்வதற்கு அவர்களை யழைத்துவரப் போனான். இவன் மனைவியான வைசவ்வையார் சிவபக்தியுள்ளவரா யிருந்தபடியால் அவர் இது நல்ல காரியமன் றென்று கருதி, இது சிவ பக்தர்க்காகட்டு மென்று பாவித்துப் பிரார்த்தித்தனர். அதற்குள்ளாக ஒரு மாஹேஸ் வரர் தன் வீட்டில் வர, சிவபெருமானே எழுந்தருளினரென்று பாவித்து, அவர்க்குச் சகல உபசாரங்களுஞ்செய்து,உள்ளே அழைத் துக்கொண்டுபோய், ஆசனத்திலிருத்திச் சமையல்செய்த திவ்யான் னத்தைப் படைத்துத் திருப்தி செய்தனர். அச் சமயம் புருஷன் ஜயி னர்களை யழைத்து வந்து பார்த்து, இச் சங்கதியை யறிந்து, பெருங் கோபங்கொண்டு, அம்மையாரை வீட்டைவிட்டு வெளியில் அகற்றி னான். அம்மையார் ஒரு ஜயின தேவால யத்தைக் கண்டு, என்றும் வெளியில் வாரதவ ராயினமையால் அது சிவாலயமென்று மயங்கி, உள்ளேநுழைந்து, ஜயின விக்கிரகத்தை வணங்கி, "சிவபெருமானே! அடியேனைக் காப்பாற்று." என்று பிரார்த்தித்தனர். இவர் வேண்டு கோளுக் கிரங்கி அந்த விக்கிரகம் இலிங்காகாரமாய்ப் பரிணமித்தது. அவர் புருஷன் அதனைப் பார்த்துச் சிவபக்தனானான்.

பரிவளிகை என்னும் ஊர் ஐதராபாத் என்னும் பட்டணத் தன்ன பாளி யென்னும் ஊராகும்.

நிம்மௌவை—இவ் வம்மையார் வீரசைவ மதத்திற் சிறந்தவர். ஜங்கமர் மடந்தோறும் நீர்கொண்டு சென்று கொடுக்கும் நியமமுடை யவர். இவர் குமாரன் ஜங்கமர் பசுக்களை மேய்க்கும் தொழில் செய்பவன். இவ் விருவரும் தம் தொழிலால் வரும் வரும்படியினால் ஜங்கமர்களுக்கு அமுது படைப்பார்கள். இவ்வாறிருக்க, திருக் கயிலை

யில் வீற்றிருந்த சிறுத்தொண்டர் சிவபெருமானையும் மற்ற தேவ கணங்களையும் நோக்கித் தம்மைப்போல வலியதொண்டுசெய்தவர்உல கில் யாருமில்லையென்று, பெருமிதமுற்றுச் சொன்னார். சிவபெரு மான் அவரைப் பூலோகத்துக்கு அழைத்துக்கொண்டுவந்து, நிம்மவ் வையார் மனையில் ஜங்கம கோலங்கொண்டு சேர்ந்தார். அம்மையார் சிவபெருமானைச் சாஷ்டாங்கமாய் வணங்கி, ஆசனத்தின் மீதிருத்தித் துதித்து, ஜங்கமர்கள் பசித்துக் களைத்து வந்தாரென்று கருதி, விரை வாக நீராடி, அன்னம் கறி முதலியவற்றைச் சமைத்து வைத்து, நீர் திரட்டிவரச்சென்றார். அச்சமயம் அம்மையார் குமாரன் வந்து, பார்த் துக் கூப்பிட்டு மாதாவைக் காணாமையாலும், கொடிய பசியால் வருந்தி னமையாலும் அங்குள்ள திருவமுதில் ஒரு அதிரசத்தை யெடுத்துத் தின்றான். அச்சமயம் திரும்பிவந்த அம்மையார் புத்திரன் செய்த துர்ச் செய்கையைப் பார்த்துப் பெருங்கோபங் கொண்டு, தண்ணீர்க் குடத் தைக் கீழே யிறக்கிவைத்து, உலக்கையால் அவனைச் சாவப் புடைத்த னர். இறந்த அவனை இழுத்துக் கொண்டுபோய், ஒரு புறத்தில் மூடி வைத்துவிட்டு, மறுபடியும் முன்போலவே திருவமுதைச் சமைத்து வைத்து, பொய்த் தூக்கங்கொண் டிருந்த ஜங்கமர்களை எழுப்பி, அவர் களைக் குளிப்பாட்டிப் பூஜைசெய்து, திருவமுது படைத்தார். அப் போது சிவபெருமான் அம்மையாரை நோக்கி, "அம்மா! பசியுடன் வந்த உன் மகனை யழைத்து அன்னம் படை." என்றார். அம்மை யார், "நான் அச் சிறுத்தொண்டனல்லேன். சிவத்துரோகஞ் செய்த மாபாவியைக் கொன்றுவிட்டேன். அவனைத் திரும்பவும் அழைக்க மாட்டேன்." என்றார். இதனைப் பார்த்துச் சிறுத்தொண்டர் நாணித் தலை குனிந்தார். சிவபெருமான் சிறுத்தொண்டரைப் பார்த்து "நீர் உம்மை வியந்தீரே." என்று கூறி, அப் புத்திரனை யெழுப்பி, இருவர்க்கும் திருக்கயிலாய பதவியை யளித்தார்.

கௌரி—மதுரையில் இவ் வம்மையார் விரூபாக்ஷனென்னும் சைவப் பிராமணனுக்குச் சுபவிருதை யென்னும் தேவியிடம் பிறந்த வர். அவர்கள் இவ் வம்மையாரை அரிய தவஞ்செய்து பெற்றனர். இவ் வம்மையார் தமது ஐந்தாம் வயதில் பிறவிப்பிணி நீங்கத் தந்தை உபதேசித்த கௌரி மந்த்ரத்தை ஜபித்துவர, பெண்ணுக்கு மணப் பருவம் வந்ததை யறிந்து, தந்தை தகுந்த சைவவேதியக் கணவன் விரைவில் கிடைக்காமையால் பிக்ஷைக்கு வந்த கொடிய வைணவப்

பிராமணனுக்குப் பெண்ணைத் தாரை வார்த்தான். அதன் பிறகு, கௌரியம்மையார் அவனுடன் சென்றனர். ஒருநாள் வைணவ மாமனும், மாமியும், மற்றோரும் சேர்ந்து, வேற்றூரில் நடக்கும் கலியாணத்தின் பொருட்டு வீட்டிலுள்ள சாமான்களை யெல்லாம் பூட்டிவிட்டு, இவரைத் தனியே விட்டுச் சென்றூர்கள். கௌரியம்மையார் தனியாயிருந்துகொண்டு, சிந்தனை செய்து, ஒரு சிவனடியாரையும் காணவில்லையே யென்று துயரமுற்றனர். அப்போது சிவபெருமான் விருத்தராய்த் தோன்றி, அன்னம் வேண்டினர். கௌரியம்மையார் தமது மாமன் மாமியார் கதவுகளைப் பூட்டிவிட்டு அயலூருக்குப் போயிருத்தலைத் தெரிவித்தனர். விருத்தர், " அம்மே! நீ பூட்டில் கைவைப்பதற்கு முன்னர்க் கதவு திறக்கும். விரைவில் பசிதீர்க்க வேண்டும்." என்றனர். அம்மையார் அவ்வாறே செய்து விரைவில் அன்னம் படைக்க, விருத்தர் திருவமுது செய்து விருத்தப் பருவம் நீங்கிக் குமாரராயினர். கௌரியம்மையார் இவ் வற்புதத்தைக் கண்டு, நடுக்கமுற்று, ஒருபுறம் ஒதுங்கி நிற்க, அச் சமயம் மாமன் மாமியார் முதலாயினூர் வருவதை யறிந்து, குமாரர் பச்சைக் குழந்தையா யழுதனர். மாமன் மாமியார் கௌரியம்மையாரை நோக்கி, ஏது இக் குழந்தை யென்று அதட்டிக் கேட்க, தேவதத்தனும் மனைவியும் மீண்டு வருமளவும் இக் குழந்தையைச் சற்றுப் பார்த்திருக்கச் சொல்லிச் சென்றனரென்று கூற, மாமன் மாமியார், " நீ சிவனிடம் அன்புடையவள். எங்களுக்காகாய்." என்று வைது குழந்தையுடன் கௌரியம்மையாரை வீட்டை விட்டு அப்புறப்படுத்த, கௌரியம்மையார் அன்புற்று வெளியே வந்து, கௌரி மந்த்ரத்தை ஜபிக்க, சிவபெருமான் இடபாரூடராய்க் காட்சிதந்து, கௌரியம்மையாரை அருகிருத்தித் திருக்கயிலைக் கெழுந்தருளினர். (8)

[இச் செய்யுள் என்னுதலிற்றோ வெனின், சிவபெருமான் எவ்வாறாவது தன்னைப் பூஜித்தோர்க் கருளுபவனாயிருக்கும் அவனது அடியார்க் கெளியனாந் தன்மை யுணர்த்துதல் நுதலிற்று.]

உவமையறு மாகம விதிப்படியு ளன்போ
டுளுற்றுசிவ பூசை யதனு
லன் றிரு வடிக்கமல முற்றசிவ கோசரிய
ரோங்குமார்க் கண்ட ரிதலாற்

றவமிகுங் கண்ணப்பர் தண்டியடி முதலினோர்
தகுபத்தி வழியி னாலுன்
றண்டா மரைப்பத மடைந்தார் கரிக்குரீஇத்
தகுநாரை பசுபாம் புதொல்
பவமகன் றனநல்ல வைராக்ய வழியிலிப்
பாங்கொன் றுமிலிநா யினேன்
பண்பின்மா பாவியொரு நீசிபுரி பூசைக்கு
பரமுத்தி தந்தனை யெனா
வவமகன் றிடுமறிஞ ருரைதுணிந் தாற்றியிடு
மபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமாரசற் குருபரா
லபிடேக மாடி யருளே.

(இ - ள்) உவமையறும் - நிகரற்ற, ஆகம விதிப்படி - சிவாகமங்களிற் கூறிய கிரமப்படி, உள் அன்போடு - மனத்திலெழுந்த அன்புடன், உஞற்று - செய்த, சிவ பூசையதனால் - சிவார்ச்சனையால், உன்—, திருவடிக் கமலமுற்ற - திருவடித் தாமரைகளை யடைந்த, சிவகோசரியர்—, ஓங்கும் - சிறப்புற்ற, மார்க்கண்டர்—, இது அலால் - இதுவுமன்றி, தவமிகும் - தவத்திற் சிறந்த, கண்ணப்பர்—, தண்டியடி—, முதலினோர்-முதலிய நாயன்மார்கள், தகுபத்தி வழியினால் - செய்யத்தக்க பக்தி மார்க்கத்தினால், உன்—, தண் - குளிர்ச்சி பொருந்திய, தாமரைப்பதம் - தாமரைமலர் போன்ற திருவடிகளை, அடைந்தார் - சேர்ந்தார்கள், தகு - போற்றத் தக்கதாகிய, கரிக்குரீஇ - கரிக்குருவியும், பசு - பசுவும், பாம்பு - பாம்பும் (ஆகிய இவைகள்), நல்ல வைராக்கிய வழியில் - சிறந்த வைராக்கிய மார்க்கத்தினால் (பூஜைசெய்து), தொல் பவம்-(தமக்கு நேரிட்டிருந்த) பழமையான பிறப்புகள், அகன்றன - நீங்கின, இப்பாங்கொன்றுமிலி- இந்த நற்குணம் சற்று மில்லாதவனாகிய, நாயினேன் - நாயினுங் கடைப் பட்டவனாகிய அடியேன், பண்பில் - சன்மார்க்க மில்லாத, மாபாவி - பெரும்பாவியாகிய, ஒரு—, நீசி - நீசஸ்த்ரீ, புரிபூசைக்கு - செய்யும் சிவ பூஜைக்கு, பரமுத்தி - மேலான பதவியை, தந்தனை - கொடுத்தருளினாய், எனா - என்று, அவமகன்றிடும் - தவறில்லாத,

அறிஞர் - அறிவாலுயர்ந்தோர், உரை - சொன்ன சொல்லை, தணிந்து - தெளிந்து, ஆற்றியிடும்-(அடியேன்) செய்கின்ற, அபிடேகம் - அபிஷேகத்தை, ஆடியருள் - திருவுளங்கொண்டருளவேண்டும், அமலம் - பரிசுத்தமான, முதுகிரியினமர் - விருத்தாசலத்தி லெழுந்தருளிய, குமர சற்குருபர - குமார தேவனென்னும் திருநாமத்தினை யுடைய பரமாசிரியனே, நல் அபிடேக மாடியருள் - (அடியேங்கள் செய்யும்) நல்ல அபிஷேகத்தைத் திருவுளங்கொண்டருள வேண்டும் (எ - று.)

**சிவகோசரியாரும், கண்ணப்பரும்**—கண்ணப்பர் உடுப்பூரி லிருந்த வேடுவ குலத்ததிபதியான நாகனுக்குத் தத்தை யென்னும் மனைவியிடம் பிறந்தவர். இவர்க்குத் திண்ணரென்பது தாய்தந்தைய ரிட்ட பெயர். இவர் வேட்டையாடச் சென்றபோது திருக்காளத்தி மலையைச் சேர்ந்து, அவ்விடம் சிவலிங்க மூர்த்தியைக் கண்டார். அக் கடவுளைத் தரிசித்து, அன்பு மேலிட்டுப் பரவசமடைந்தார். அச் சிவலிங்க மூர்த்திக்குச் சிவகோசரியார் என்னும் சிவப்பிராமணர் சிவாகம விதிப்படி பூஜை செய்து வந்தார். திண்ணனார் சிவலிங்கப் பெருமானுக்கு இறைச்சியை வாயால் உருசி பார்த்துத் திருவமுது செய்விக்கத் துணிந்தார். இதனைச் சிவகோசரியார் பார்த்து வருந்தி, இறைச்சி முதலியவற்றை அப்புறப்படுத்தி விட்டு, விதிப்படி சிவ பூஜை செய்வாராயினர். இவ்வாறு சிலகாலம் செல்ல, ஒருநாள் திண்ணனார் சிவலிங்கப்பெருமானுக்கு ஒரு கண்ணில் இரத்தம் வரு வதைப் பார்த்து, விசனமுற்று, இரத்தத்தை நிறுத்தப் பலவகை யான மூலிகைகளினுல் முயன்று, பயனில்லாமையைக் கண்டு, தமது கண்ணைத் தோண்டி இரத்தம் ஒழுகின கண்ணில் அப்பினர். கண் குணப்பட்டது. பிறகு, மற்றொரு கண்ணினின்றும் இரத்தம் ஒழுகு தலைப் பார்த்து, மிகவும் துன்புற்றுத் தமது மற்றொரு கண்ணையும் தோண்டத் தொடங்க, சிவபெருமான் தரிசனங் கொடுத்து, சிவகோ சரியாரையும் கண்ணப்பரையும் புகழ்ந்து சிவபதம் அருளினர்.

**மார்க்கண்டர்**—குச்சக முனிவரது புத்திரர் கவுசிகர். இவர்க்கு மிருகண்டியே ரென்னும் பெயர் திருமாலினுல் கொடுக்கப்பட்டது. இவர் விருந்தை யென்னும் பெண்ணை மணந்தார். இவர்க்கு மிரு கண்டர் என்னும் புத்திரன் பிறந்தான். மிருகண்ட முனிவர்க்குப் புத்திரப் பேறில்லாமையால், ஸ்ரீகாசி க்ஷேத்திரத்தை யடைந்து

விசுவநாதரை நோக்கிக் கடுந்தவஞ் செய்தார். சிவபெருமான் பிரசன்னமாகி, பதினாறு வயது ஆயுசுள்ள ஸத் புத்திரன் உண்டாகக் கடாக்ஷித்து மறைந்தனர். அவ்வாறே புத்திரன் பிறக்க, அவனுக்குத் தாய் தந்தையர் மார்க்கண்டன் என்னும் பெயரிட்டார்கள். இப் புத்திரன் வளர்ந்து வரும்போது, பதினாறும் வயது சமீபிக்க, தாய் தந்தையர் துன்பப் படுவாராயினர். மார்க்கண்டர் சங்கதியை யறிந்து, மாதாபிதாக்களிடம் விடைபெற்று, சிவபெருமானைப் பூஜித்து வேண்டினர். சிவபெருமான் பிரசன்னமாகி யமனை உதைத்து மாய்த்து, அவர்க்குச் சிவபதமளித்து, பிறகு தேவர் வேண்ட யமனை யும் உயிர்ப்பித் தருளினார்.

**தண்டியடிகள்**—இந் நாயனார் திருவாரூரிற் பிறவிக் குருடாய்ப் பிறந்து, சிவத்தொண்டு வழுவாமல் செய்து வந்தார். கமலாலயத் தருகில் சமணர் மடம் ஒன்று இருந்தது. திருக்குளத்தில் தீர்த்தம் குறைவாயிருப்பதை யறிந்து, அதனைத் தோண்டி நீர்க்குறை நீக்கு வதற்காக நீர்க்கரைக்கும் மேற்கரைக்குமாகத் தறி நட்டு, அதில் கயிறு கட்டி, அக் கயிற்றைத் தடவிக்கொண்டு அக் குளத்தைச் சீர்ப்படுத்தும் போது, சமணர் பொறாமல் இவ்வாறு செய்வதனால் செந்துக்கள் இறக்குமென்று யோசித்து, தறி, கூடை, மண்வெட்டி முதலிய வற்றைப் பிடுங்கி எறிந்தனர். நாயனார் அவர்களை நோக்கி, "சிவ பெருமானருளால் எனக்குக் கண் தெரிந்தால், நீங்கள் என்ன செய்து கொள்வீர்?" என்று கேட்க, சமணர், "நாங்கள் ஊரைவிட்டுப் போய் விடுவோம்." என்று சொன்னார்கள். நாயனார் சிவபெருமான் சந்நிதி யிற் சென்று, நடந்தவற்றைச் சொல்லி, முறையிட, சிவபெருமான் அவர் கனவில் எழுந்தருளி, "அன்பனே! உன் கண் தெரிந்து, சமணர் குருடாகக் காண்பாய்." என்று கூறி, அரசனுக்கும் கனவில் தோன்றி வழக்குத் தீர்க்குமாறு பணித்து மறைந்தார். விடிந்தபின், அரசன் நாயனாருடன் சமணரைக் கேட்க, அவர்கள் உடன்பட்டனர். நாயனார், "நான் சிவபெருமானுக்கு மெய்யடியனாயின், நான் என் கண்பெற்று, சமணர் கண்ணிழப்பர்." என்று கூறிக் குளத்திலுள்ள நீரில் மூழ்கி, எழுந்து, கண்பெற்று நின்றனர். சமணர் கண்ணிழந் தனர். அரசன் இதனைக் கண்டு, வியந்து, சமணரை ஊரைவிட் டகற்றினான்.

கரிக்குருவி—மதுரையில் இராஜராஜ பாண்டியன் இந்திரபதவி யடைந்த பின்னர், அவன் குமாரனாகிய சுகுணபாண்டியன் அரசாட்சி செய்யுங் காலத்தில், வலிமை மிக்க ஒருவன் முற்பிறப்பில் பெரிய தவஞ்செய்து, சிறிய பாபஞ் செய்து, அப் பாபத்தினால் அசேதனமாகிய கரிக்குருவியாய்ப் பிறந்தான். காகம் முதலிய பறவைகளெல்லாம் இந்தக் கரிக்குருவியைத் தலையில் இரத்தம் உண்டாகக் கொத்தித் துன்பஞ் செய்தமையால் இது வருந்தி, வனத்தை யடைந்து, சோர்ந்து அங்குள்ள மாமரத்தின்மீது வசித்திருந்தது. அவ்விடம் அச்சமயம் திருநீறு, உருத்திராக்கம் முதலிய சிவசின்னங்களைத் தரித்த ஒரு முனிவர் வந்தனர். இவர் அவ்விடம் குழுமியிருந்த சிலரை நோக்கி, "தன்னை யடைந்தோர்க்கு முத்திப் பயனை யளிக்கும் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய மூன்றும் ஒருங்கே அமையப் பெற்றது மதுரைமா நகரமாம். அவ்விடம் எழுந்தருளி யிருக்கும் சோமசுந்தரக் கடவுளை வணங்கும் அடியார்களுக்கு இப் பிறப்பில் முத்தி கைகூடும். ஆகையால், சோமசுந்தரக் கடவுளே மேம்பட்டவர்." என்று கூறினர். கொம்பிலிருந்த அக் கரிக்குருவி அதனைக் கேட்டு, ஞானமடைந்து, தான் பறவையாய்ப் பிறந்த வரலாற்றை யெல்லாம் அறிந்து, அப் பிறப்பில் அந்த ஜன்மத்தை மாற்றிக்கொள்ளத் துணிந்து, மதுரைக்குச் சென்று, பொற்றாமரைக் குளத்தில் முழுகிச் சோமசுந்தரக்கடவுளைப் பிரதக்ஷிணஞ் செய்து, கடவுளை மனத்தினாலர்ச்சனை செய்து வணங்கச் சிவபெருமான் கடாக்ஷித்துக் கரிக்குருவிக்கு மிருத்தியுஞ்சய மகாமந்த்ரத்தை உபதேசித்தருளினர். இம் மந்த்ரத்தைக் காதில் கேட்டுச் சிற்றறிவு நீங்கிச் சிவபெருமானைத் துதித்துத் தன் குலப்பறவைகளும் வன்மைபெற வேண்டுமென்று வேண்ட, அவ்வாறே சிவபெருமான் கரிக்குருவிக்குக் கிருபை செய்து, சிவபதம் தந்தருளினர். கரிக்குருவிகள் வன்மை யடைந்திருப்பதை இன்றும் காணலாம்.

நாரை—மதுரை மா நகரின் தென்பால் ஓர் ஊரில் ஒரு தடாக மிருந்தது. அதிலுள்ள மீன்களைத் தின்றுகொண்டு ஒரு இள நாரை தடாகத் துறையில் வசித்திருந்தது. சிலநாள் மழையில்லாமையால் தடாகம் வற்றிப் போயிற்று. தனக்கு இரையை விரும்பி அத் தடாகத்தை விட்டு, விரைந்து சென்று, முனிவர்கள் வாசஞ் செய்யும் ஒரு வனத்திற் சென்று, சோர்ந்து விழுந்தது.

அவ்விடம் மரங்கள் சூழ்ந்த அதோ தீர்த்தமென்னும் ஒரு தடாகம் இருந்தது. இதன் கரையில் நாரை தங்கியிருந்தது. வேதாகமங்களை யுணர்ந்த அத் தவசிகள் தடாகத்தில் நீராடி எழுந்தோறும் பிடரியின்மீது சாய்ந்து கிடக்கின்ற நீண்ட சடையில் தாவுகின்ற மீன்கள் புரள்வதைப் பார்த்து, இம் மீன்கள் இத் தவசிகள் மேனியைப் பரிசிக்க என்ன தவம் செய்தனவோ வென்று கருதி, இவை இரை யாகா வென்று, இரைதேட வந்த நாரை வெறுத்து, அவ்விடம் வசித் தது. அத் தவசிகள் நாடோறும் குளத்தில் நீராடி, நித்திய கருமம் முடித்து, சோமசுந்தரக் கடவுளின் புகழைக் கூறும் திருவாலவாய் மான்மிய நூலை ஓதுவாராயினர். சிவபெருமான் செய்தருளிய திருவிளையாடலையும், சோமசுந்தர மூர்த்தியின் சிறப்பையும், திரு வாலவாய்த் தலச் சிறப்பையும், தீர்த்தத்தின் சிறப்பையும், அடைந்த வர்க்கெளியவன் திறத்தையும் எடுத்துக்கூற, அந் நாரை கேட்டு, ஞானோதயம் பெற்று, சோமசுந்தரக் கடவுளிடம் அன்புமிகுந்து, மேலே எழுந்து பறந்து, மதுரையை யடைந்து, பொற்றாமரைக் குளத்தில் நீராடிச் சிவபெருமானை வணங்கி, பிரதக்ஷிணஞ் செய்து, மனதில் தியானஞ் செய்து, பதினைந்து நாள் இவ்வாறு செய்து, பசி யால் வருந்தி, மீன்களை உண்போமெனக் கருதி, பின்பு ஞானம் பிறந்து, மீன்களைத் தின்னாதுவிட்டு, மறுபடியும் சிவநேசம் பிறந்து, மனத்தை அந் நிலையில் பெயராது வைத்திருக்குங் காலத்தில் சிவ பெருமான் காட்சி தந்து, நாரையைப் பார்த்து, "உனக்கு என்ன வரம் வேண்டும். கேள். அருளுவோம்." என்று கேட்க, நாரை, "ஐயனே! நான் இப் பிறவியை நீக்கிச் சிவலோகமடைய வேண்டும். மேலும், என் குலத்தாரெல்லாம் இப் பொற்றாமரைக் குளத்து மீன்களைத் தின்னுவாராயின் பாபமடைவார்கள். ஆகையால் இந்தக் குளத்தில் மீன்களில்லாமற் செய்யவேண்டும்." என்று பிரார்த் திக்க, அவ்வாறே சிவபெருமான் அருளினார். நாரையும் சிவபத மடைந்தது. பொற்றாமரைக் குளத்தில் மீன்கள் இல்லாதிருப்பதை இன்றும் காணலாம்.

பசு—முன்னொரு காலத்தில் பிரம்மதேவர் துயிலும் இரவில் சராசரங்களனைத்தும் அந்தரப் பிரளயத்தினால் அழிந்தன. பிரம்ம தேவர் துயிலொழிந்து, சராசரங்கள் நாசமாயிருப்பதை நோக்கி, மிகவும் துயரமுற்று, முன்போல மறுபடியும் படைக்கத் தொடங்கி

ஞர். அத் தொழில் கைகூடவில்லை. அதனால் பிரம்மதேவர் வருந்தி, திருக்கயிலைக்குச் சென்று, சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்தனர். அதன் முன்னரே சிவபெருமான் சிருட்டியை நினைந்தபோது, காமதேநு வந்து வணங்கியது. சிவபெருமான் அதனை நோக்கி, "நீ பூமியின்கண் சென்று, பிரம்மதேவனைப்போல் சிருட்டித் தொழில் செய்க." என்று பணித்தனர். பின்னர்ச் சிவபெருமான் பிரம்மதேவர்க்கும் பிரசன்னராக, பிரம்மதேவர், "அடியேன் துயின்றமையால் சராசரங்கள் அழிந்தன. அதனால், பாபமும் மறதியும் சம்பவித்தன. அப் பாபம் தீரும்பொருட்டும் சிருட்டித் தொழில் கைகூடும் பொருட்டும் தேவரீரை அர்ச்சனை செய்ய விரும்புகிறேன்." என்று பிரார்த்திக்க, சிவபெருமான், "அவ்வாறே நீ ஆம்பிரா நதிக்கு வடகரையிலுள்ள கருவூரை யடைந்து, அங்கு நம்மைப் பூஜிப்பாயாக." என்று அருளிச் செய்தனர். முன்னே விடைபெற்ற காமதேநு பூலோகத்தில் தென்றிசையை யடைந்து, தவஞ்செய்ய நல்ல தலம் யாதென்று நாடுங்கால் நாரத முநிவர் எதிர்ப்பட்டு, "தேநுவே! ஆம்பிரா நதிக்கரையில் வஞ்சி வனமொன்றுளது. அங்குச் சென்று, நீ தவம் புரிந்தால் இஷ்ட சித்திகளை எளிதில் பெறுவாய்." என்று கூற, காமதேநு வராககிரியை யடுத்து, வஞ்சி வனத்தைக் கண்டு, நாரதர் கூறியபடி தவஞ்செய்துகொண் டிருந்தது. ஓர் நாள் "காமதேநுவே! இவ் வஞ்சி வனத்திலே ஒரு புற்றில் பாதலத்தினின்றும் தோன்றிய ஆதிலிங்க மென்னும் ஒரு மகாலிங்க மிருக்கிறது. நீ அதனைப் பூஜிப்பாயாக." என்று ஒரு அசரீரி வாக்கு எழுந்தது. காமதேநு அவ் வாக்கின்படியே சென்று, மிகவும் பரவசமடைந்து, அந்த இலிங்க மூர்த்திக்குப் பால் முதலிய உபகரணங்களால் அபிஷேக நைவேத்திய முதலியன செய்து, வசித்திருந்தது. பின்னர் ஓர் நாள் சிவலிங்கப் பெருமானது திருமுடியின் வாமபாகத்திலே காமதேநுவினது காற்குளம்பு பட்டு உதிரஞ் சொரிந்தது. காமதேநு அதனை நோக்கி, "ஆ! கெட்டேன். இதற்கென்ன செய்வேன்." என்று வருந்த, சிவபெருமான், "பசுவே! உன்மீது பிழையில்லை. அது நமது திருவிளையாடலேயாம். நீ அதற்காக வருந்தாதே. நீ பூஜித்த காரணத்தால் இன்று முதல் எம்மைப் பசுபதி நாயகரென்று மூவுலகங்களும் போற்றக் கடவன. நாமிருக்கு மிவ்விடத்துக்குத் தென்கீழ்த்திசையிலே சராசரங்களின் அடிச்சுவடுகள் அடையாளங்களாக வைக்கப் பட்டிருக்கின்றன. பிரளயங்கள் தோறும் பிரம்ம தேவன்

முதலாயினோர் படைத்தற்றொழிலை நமது அநுக்கிரகத்தினால் அவ்வடையாளங்களை நோக்கிச் செய்வர். நீயும் அங்குச் சென்று, நம்மைச் சிந்தித்தால் படைக்குமாற்றல் பெறுவாய்." என்று அருளிச் செய்து மறைந்தனர். காமதேநு அவ்வாறே அங்குச் சென்று, சிவத் தியானஞ்செய்து, படைக்கத் தொடங்கிற்று. சராசரங்களனைத்தும் முன் போலவே படைக்கப் பட்டன. அவைகளின் புசிப்பு நிமித்தம் வடதிசையிலே வெண்ணெய்மலை யென்று ஒரு மலையை வகுத்து, அதன் கீழ்த்திசையில் தேநு தீர்த்தமென்று ஒரு தீர்த்த மகழ்ந்து, சிலகாலம் சிவபூஜை செய்து, பிறகு சுவர்க்கம் சென்றது. வெண்ணெய் மலை தன்னைத் தரிசிப்போர்க்கு இஷ்ட சித்திகளை வேண்டுவார் வேண்டும் வண்ணம் கொடுப்பது மன்றி உஷ்ண காலத்தும் தண்ணென்றிருத்தலால் அதன் பெயரை விளக்கும்.

பாம்பு—திருக்கயிலையில் ஒரு நாள் சிவபெருமான் சிங்காதனத்தி லெழுந்தருளத் திருவுளங்கொண்டு, திருமேனியிலேபுலித்தோலாடை முதலியன புனைந்து, ஆதிசேடன் முதலிய பாம்புகளை ஆபரணமாக அணியுங் காலத்தில் காளன் என்னும் பாம்பைக் காணாது, சிந்தித்து நோக்குங்கால், அது விரகங்கொண்டு மகளிர் பாலடைந்திருத்தலை யறிந்து, அதை யழைத்து, "காளனே! நீ இப் பாம்புருவுடன் கயாரணியத்தை யடைக." என்று பணித்தனர். பின்னரும், கருணையுடன் நோக்கி, "நீ பாம்புருவுடன் அவ்விடம் என்னைப் பூஜித்துக் கொண்டிருக்குங் காலத்தில் ஒரு யானையும் பூஜிக்க எய்தும். அப்போது நீ பகைகொண்டு அதனைக் கொல்ல, அதுவும் உன்னைக் கொல்ல, இருவரும் மடிந்து முத்தியை யடைவீர்.'' என்று கட்டளையிட, பாம்பு அங்ஙனமே உதித்து, சிவபெருமானை இரத்தினங்களினால் வழிபட்டுக் கொண்டிருந்தது. இங்ஙனம் இருக்கும் நாளில் அத்தி என்னும் கணத்தலைவன் சிவபெருமான் கட்டளையினால் யானையுருக்கொண்டு, தென்கையிலாயப் பெருமானைத் திருமஞ்சன பத்திர புஷ்பாதிகளால் வழிபட்டு வருங்காலத்தில் பாம்பும் யானையும் தத்தம் அன்பு மேலீட்டினால் ஒன்று மற்றொன்றின் வழிபாட்டினைப் பகைத்து, பூஜா திரவியங்களைச் சிதைத்து, பாம்பைக் கொல்ல யானையும், யானையைக் கொல்லப் பாம்பும், காலம் நோக்கிக் கொண்டிருந்தன. தத்தமது வைராக்கிய பக்தியை நிறைவேற்றும் பொருட்டு, எதிர் பார்த்தபடி, யானையும் பாம்பும் ஏககாலத்தில் சந்திக்க,

பாம்பு பதுங்கியிருந்து, சிறிய வடிவமெடுத்து, யானையின் துதிக் கையில் நுழைந்து குடைந்தது. யானை துன்பமுற்றுக் கீழே விழுந்து, வீறிட்டுப் புரள, அத்துடன் பாம்பும் நசுங்கித் துன்பமுற்று, இரண்டும் மடிந்து சிவபதமடைந்தன.

நீதி—கேகயநாட்டில் பிராமண குலத்திற் பிறந்த சவுமியென்னும் ஒரு ஸ்திரீ இருந்தாள். இவள் கட்டழகுள்ளவள். இவளுக்கு மணப் பருவம் வர, இவள் தகப்பன் இவளை ஒரு பிராமணனுக்கு விவாகஞ் செய்து கொடுத்தான். இவ் விருவரும் இல்லறம் நடத்தி வருங்காலத்தில் இவள் கணவன் இறந்துபோக, சவுமி மிகவும் துயருற்றாள். ஆயினும், கைம்பெண்ணான பின்பும், கொடிய காமத்தினால் கற்பிழந்து, சோரத்தனமாக எல்லாரையும் புணர்ந்து வாழ்வாளாயினாள். இவள் விபசாரத்தை யறிந்து சுற்றத்தாரும் மற்றோரும் சொன்ன புத்திமதிகளைக் கேளாது, இவள் தன் இஷ்டப்படி நடந்து கருப்பமடைந்தாள். துன்மார்க்கச் செயலையுடைய இவள் ஊரிலிருக்கக் கூடாதென்று, சுற்றத்தாரும் மற்றோரும் இவளை ஊரைவிட்டு நீக்கி விட்டார்கள். இவள் அழுதுகொண்டு, காட்டிற் போய்விட்டாள். அவ்விடம் ஒரு துன்மார்க்கமுள்ள புருஷனைத் தழுவிக்கொண்டாள். அவன் இவளைத் தன் வீட்டிற்கொண்டுபோய் வைத்துக்கொள்ள, இவள் கள்ளும், இறைச்சியும், சோறும் உண்டு, அவனுடன் கலவியிற் களித்து, பிள்ளைபெற்று, நெடுங்காலம் வாழும்போது, ஒருநாள் அந்தப் புருஷன் அயலூருக்குச் செல்ல, இவள் வீட்டில் தனியாயிருக்கையில் இராப்பொழுது வர, காமாக்கினியால் சுடப்பட்டுச் சகிக்காமல் மதுபானஞ் செய்து, மாமிசம் தின்னவும் இச்சித்து, அப்புறத்திலிருந்த தொழுத்திற் சென்று, கள்ளுண்ட வெறியால் அறிவழிந்து, தள்ளாடிக்கொண்டு போய், வெள்ளாடு இதுவென்றும், பசுவின் கன்று இதுவென்றும் பகுத்துப் பாராமல், ஒரு பசுவின் கன்றைப் பிடித்து, அதன் தலையை யறுத்து, வீட்டுக்குக் கொண்டு வந்தாள். அப் பசுவின் தலையை யறுக்க விரும்பி எத்தனஞ் செய்கையில், பசுவின் கன்றென்று அறிந்து, தகாத காரியம் செய்தோமே யென்று நினைத்துச் சோர்ந்து, சிவசிவ என்றனள். மதுவின் மயக்கமான அதுன்புசெய்பு மென்று எண்ணிய வருத்தத்தினாற் பெருமூச்சுவிட்டு, சிவ பெருமான் திருவடிகளை மனமானது தியானஞ் செய்ய, கன்றை யறுக்க உட்கார்ந்த இடத்தில் இரண்டு நாழிகை அசைவற் றிருந்தாள்.

விதிவசத்தால் அவள் அந்த மாமிசத்தை நீக்கி விடாது, பின்னும் அக் கன்றின் மாமிசத்தைச் சமைத்து உண்டு, அயலார் கேட்கும் படி, "ஐயோ! கொடும் பாவியாகிய என் பசுவின் இளங்கன்றை ஒரு புலி வந்து கொன்று தின்று விட்டது. நம்மினத்தார்களே! பாருங்கள்." என்று ஓலமிட்டழுது, தானும் வாடினாள். இராப் பொழுது நீங்க, அவள் கணவன் வந்து, கன்று இறந்த பாபத்தைக் கேட்டிரங்கி, நடு நடுங்கி, அவளுடன் கூடிச் சுகித்திருக்குங் காலத்தில் அவள் இறக்க, யமதூதர்கள் இவளைப் பாசத்தாற் கட்டி, யமனிடம் விட்டார்கள். யமன் விசாரித்து, அவளைப் பார்த்து, "நீ கொடிய நரகத்தில் விழத்தக்கவ ளல்லள். ஆயினும், புலையர்மகளாய்ப் பூலோ கத்திற் பிறக்கக்கடவாய்." என்று சொன்னான். அவ்வாறே கருமை யாகவும், குருடியாகவும் அழகில்லாத நீசஸ்த்ரீயாகப் பிறந்தாள். பெற்ற தாய் தந்தையர் நாய் தின்று மீந்த மாமிசத்தையும், பசுவின் கன்று மாமிசத்தையும், கள்ளையும் ஊட்டி, அவளை வளர்க்க, அவை தீராப் பிணியாய்ப் பொருந்தி வளருங் காலத்தில் பெற்றவர்கள் இறந்தார்கள். விவாகஞ் செய்து கொள்பவரில்லாமையாலும், பசிநோயைத் தாங்க முடியாமையாலும், தளர்ந்த நடையோடு புலைச்சேரி தோறும் சென்று, உடல் மெலிந்து கிழவியானாள். நோயினாலும், பசியினாலும், கிழத் தன்மையினாலும் வருந்தித் தளர்ந்த நடையுடன் சிவராத்திரியில் கோகன்னத்துக்குச் செல்கின்ற கூட்டத்தாருடன் தானும் சென் றாள். அவ்விடம் ஒரு வீதியிற் சென்று, " கண்ணில்லாத எனக்குச் சோறு கொடுங்கள்.''என்று அரற்றிய குரலைக் கேட்டு அகங்காரமுள்ள ஒருவன் தன் கையிலுள்ள வில்வத்தைச் சோறென்று அவள் கையிற் கொடுத்தான். அவள் அந்த வில்வத்தை சோறல்ல வென்று தெரிந்து, பக்கத்திலெறிய, அது அவ்விடமுள்ள சிவலிங்கமூர்த்தியின் மீது விழுந் தது. பிறகு, அவ்விடம் அவள் உடல் மெலிந்து விழுந்து, உயிர்துறந்து சிவராத்திரியில் தான் கவனியாதெறிந்த வில்வம் சிவபெருமான் மீது விழுந்த புண்ணியத்தினாற் சிவபதமடைந்தாள்.

[இச் செய்யுள் என்னுதலிற்றோ வெனின், ஆசாரியர் செய்த அற்புதச் செயல்களை உணர்த்துதல் நுதலிற்று.]

தண்டா முயற்சிகொடு பணிபுரிந் தேதொழு
சடாமுனிக் கொழியா தவெஞ்
சாபந் தொலைத்தனை துவாரபா லகர்கொடார்
சந்நிதிப் பணிமு டித்தாய்
வண்டார் குழற்காளி முடியிலடி சூட்டியே
மாந்திரிகன் விழிபோக் கினுய்
வடிவெணி றள்ளியிட் டேகுட்ட நோயன்மெய்
வாதனை தவிர்த்த ருளினுய்
துண்டாய்ச் சமைத்தமீன் துள்ளியோ டச்செய்தாய்
துரிசிலா ரூர்வி ழவினிற்
றேருமிலருள் வீரசை வம்மெனத் தேருகைத்
துப்பாரி னிலைநாட் டினு
யண்டாத புகழிதன் றென்றனையு மாண்டவா
வபிடேக மாடி யருளே
யமலமுது கிரியினமர் குமரசற் குருபரந
லபிடேக மாடி யருளே.

(இ-ள்) தண்டா - நீக்கமில்லாத, முயற்சிகொடு - முயற்சியுடன், பணிபுரிந்து - பணிவிடைசெய்து, தொழு - வணங்கிய, சடாமுனிக்கு - ஜடாமுனிக்கு (நேரிட்ட), ஒழியாத - நீங்காத, வெஞ்சாபம் - கொடிய சாபத்தை, தொலைத்தனை - நீக்கியருளினுய், துவார பாலகர் கொடு - துவார பாலகரைக் கொண்டு, ஆர்சந்நிதிப்பணி - சிவாலயத் திருப்பணியை, முடித்தாய் - முடித்தருளினுய், வண்டார் - வண்டுகள் உண்கின்ற, குழல் - கூந்தலையுடைய, காளி - பத்திர காளி (விக்கிரகத்தின்), முடியில் - தலையின்மீது, அடிசூட்டி - திருவடியை வைத்து, மாந்திரிகன் - மந்திரவாதியின், விழி - கண்கள், போக்கினுய் - அவிந்துபோகச் செய்தருளினுய், வடி - வடிகட்டின, வெணிறு - திருவெண்ணீற்றை, அள்ளியிட்டு - (திருக்கையால்) எடுத்திட்டு, குட்டநோயன் - குஷ்டரோகியின், மெய்வாதனை - தேக வருத்தத்தை, தவிர்த் தருளினுய் - நீக்கி யருளினுய், துண்டாய்ச்

சமைத்த மீன் - (அன்னத்துடன் கறியமுதுக்காக) துண்டாக்கிச் சமையல் செய்து கொடுத்த மீன், துள்ளியோடச் செய்தாய் - (உயிர் பெற்று நீரில்) குதித்தோடச் செய்தருளினுய், தரிசுஇல் - குற்ற மில்லாத, ஆரூர் விழவினில் - திருவாரூர்த் திருவிழாவில், தோமில் - குற்றமில்லாத, அருள் - திருவருட் சம்மதமானது, வீரசைவம் - வீர சைவமாம், என -(இஃது உண்மையாயின், தேர் நடக்கட்டும்.) என்று கூறி, தேர் - தேரை, உகைத்து-நடத்தி, பாரினில்-உலகத்தில், நிலை நாட்டினுய் - (வீரசைவத்தின் பெருமையை) நிலைபெறச் செய்தருளினுய், அண்டாத - கிட்டாத, புகழ்—, இது அன்று என்று - இதுவல்ல வென்று சொல்லும்படி, எனையும் - அடியேனையும், ஆண்டவா - ஆட்கொண்டருளிய தேவனே, அபிடேகமாடியருள் - அபிஷேகஞ் செய்துகொண்டருள வேண்டும், அமலம் - பரிசுத்தமான, முதுகிரியினமர் - விருத்தாசலத்திலெழுந் தருளிய, குமர சற்குருபர - குமார தேவனென்னும் திருநாமத்தினை யுடைய பரமாசாரியனே, நல் அபிடேகமாடியருள் - (அடியேங்கள் செய்யும்) நல்ல அபிஷேகத் தைத் திரு வுளங்கொண் டருளவேண்டும்.

(ப - ம்) ஆசாரியர் செய்த அற்புதச் செயல்களை இத்துடன் சேர்த்திருக்கும் இவர் சரித்திரத்திற் காண்க. (10)

குமாரதேவசுவாமிகள் அபிஷேகமாலை முற்றிற்று



உ

சிவமயம்



திரிபதார்த்த விளக்கம்

# உபதேச விளக்கம்

••••••OO••••••

## பாயிரம்

காப்பு

### விநாயகர் துதி

துதிதரு தொண்டர் தங்க டோமிலா வுளங்க டோறும்
புதியதெள் ளமுதம் போன்ற பொருவில்பே ரின்பீந் தென்போற்
பதிதர்தம் பரிப வம்போம் படியருள் பாலித் தென்றும்
வதிதரு மாழத் தானை மலரடி வணக்கஞ் செய்வாம். (1)

### பழமலைநாதர், பெரியநாயகி, சுப்பிரமண்ணியர், குமாரதேவர் துதி

முதுகிரீச் சுரன்றன் முண்டகப் பதமு
மொய்குழற் செய்யவாய்ப் பசுந்தோள்
விதுநுதல் விருத்தாம் பிகைதிருப் பதமும்
வெய்யசூ ருரம்பக வெறிந்தோன்
மதுமலர்ப் பதமு நந்தியெம் பெருமான்
மலர்ப்பதங் குமாரசற் குரவன்
புதுமலர்ப் பதமு மெம்முடிக் கணியாப்
புனைந்துநா டொறும்பணிந் திடுவாம். (2)

### ஆசிரியர் வணக்கம்

ஒருநோக் கதனுன் முப்பொருளீ
தீதென் றுரைத்த வொப்பிலனப்
பெருநோக் கதனுன் முத்திநிலை
யீதென் றுரைத்த பெருமானை

னிருநோக் கினையுந் தடைபுரிந்த
　　விருண்மா மலந்தீர்த் தின்பளிக்குந்
திருநோக் குடையான் முத்தையன்
　　றிருமா மலர்த்தா டினந்தொழுவாம். (3)

அவையடக்கம்

தாழை மலர்கண் டகங்குறித்துத்
　　தள்ளா ரதனின் மணங்கருதி
மாழை யெனவுண் ணசையடைந்தம்
　　மலர்கொண் டுவப்ப ரதுபோல
வேழை மதியே னிசைத்தவிந்நா
　　லியல்சொற் குற்ற மெணியிகழார்
கூழை நிலையை யுடையுரவோர்
　　கொள்வா ரிதன்முப் பொருள்குறித்தே. (4)

பாயிரம் முற்றிற்று

நூல்

மதிபர சீவ பந்தமா யென்று
　　மனுந்திரி பதார்த்தமற் றதனிற்
றுதிபதி சுயம்பிர காசநல் லறிவாய்த்
　　தூநிரு மலமதா தலினல்
வதிமல பந்தஞ் சடமதா கையினல்
　　வகுத்திடு மிவ்விரு பொருட்கு
மதிகதி விசாரஞ் செய்துவீட் டின்ப
　　மடையவேண் டுவதிலை யறியே. (1)

செப்புமிவ் விருபொ ருட்கு மிடையதாய்ச் செறிவா னுகி
யொப்பறு பந்த முத்திக் குடையவ னுகி நிற்கு
மப்பொருட் சிவன் ருனே யடைவொடு திரிப தார்த்தஞ்
செப்பமாய் விசாரஞ் செய்து சேர்ந்திட வேண்டு முத்தி.

சொற்றிரி பதார்த்த வாய்வே சொச்சொரு பானு பூதி
பெற்றிடு மூல மாகும் பிறிதொரு மார்க்கத் தொல்லா
தெற்றிறு லெனிலித்தைப் போலெந்தமார்க் கமுஞ்சந்தேக
மற்றிட வுரையா தத்தா லதிகஞ்சை வசித் தாந்தம். (3)

## பதி யிலக்கணம்

ஆதியா யறிவா நந்த வுருவமா யமல மாகிச்
சோதியாய் வியாபியாகிச் சொற் றுணங் குறியொன் றின்றி
யீதலா துலகம்யாவு மியக்குவா ளுகிச் சத்தாய்ப்
பேதியா நித்த மாகிப் பிறங்குமாற் பதியின் றன்மை. (4)

## பசு விலக்கணம்

மூலவா ணவத்தா லன்றே மூடுபே ரறிவாய் மோகச்
சீலமா யையினுற் றூன்றுஞ் சிற்றறி வுடைத்தா யாற்றுங்
காலமார் வினையாற் றூற்றங் கழிவுடைத் தாகிக் கண்ணைப்
போலடுத் ததின்றன் மைத்தாய்ப் பொருந்துமாற் பசுவின் றன்மை.

## ஆணவமல விலக்கணம்

ஏகமாய் நித்த மாகி யெண்ணில்சத் திகளு டைத்தாய்
மோகமாய்ச் செம்பிலேய்ந்த களிம்பென முதல்வி தன்னுற்
பாகமாங் காறு நின்று பசுவுணர் முழுது மார்க்குஞ்
சோகமார் மலங்கட் கெல்லா மூலமா ணவமாய்ச் சொல்வர்.

## மாயாமல விலக்கணம்

சுத்தமு மசுத்தஞ் சுத்தா சுத்தநித் தியமாய்த் தூய்தாந்
தத்துவ மைந்தோ டேழு தகுமிரு பத்து நான்கா
யொத்துமுக் காண்ட மாகி புயிருணர் விச்சை யாதி
வித்தகக் கலாதி தன்னுல் விளக்கிடு மலமா மாயை. (7)

### கன்மமல விலக்கணம்

நித்தியமாய் மனவாக்குக் காயத்தா லியற்று
  நேர்மையதாய் நிமலசத்தி யாற்செலுத்தப் படலாய்ப்
புத்தியிட மாய்ச்சடமாய்ப் புகலருவாய்ப் பாவ
  புண்ணியமிச் சிரமாகிப் போக்குவர வுடைத்தா
யொத்துறஞ்சஞ் சிதவாகா மியபிரா ரத்த
  வுருவாகிச் சாதியாயுப் போகமது மாகி
மெத்தியெழு மாற்றினீர் போலிடையீ டின்றி
  மேவுவதாங் கன்மமல மெனத்தெளிதி நீயே. (8)

### திரிபதார்த்த சம்பந்த விலக்கணம்

தேற்றமுறு சத்திக்குஞ் சிவனுக்கு மென்றுஞ்
  செப்புவர்கள் சமவாய சம்பந்த மெனவே
யூற்றமிகு சிவத்துக்குஞ் சீவனுக்குங் கதிர்கண்
  ணொளிபோற்று தாத்மியசம் பந்தமென வுரைப்பர்
சாற்றியிடு மலதனுக்குஞ் சீவனுக்கு மநாதி
  சையோக சம்பந்தஞ் சார்போதன் றனக்குந்
தோற்றியிடு பிரவஞ்சந் தனக்குஞ்சம் பந்தஞ்
  சொல்லுவர்கள் சையுத்த சமவாய மெனவே. (9)

### பதிபசுபாச சுபாவம்

பேரொளியா யகண்டவடி வாயிருந்த படியே
  பிறங்கியிருந் தொட்டாமற் சுட்டறநின் றுணர்த்துஞ்
சிரவி போற்சிவஞ்சிற் றொளியாய்வெவ் வேறுய்ச்
  சென்றுசுட்டி யொட்டியறி யும்விழிபோற் சீவன்
யாமறிவித் தாலுமறி யாத்தானு மறியா
  தனுர்த்தசட மாமிருள்போ லாணவமா மிரவிச்
சிரொளியார் கண்ணிருள்போஞ் செய்கையினைப் போலச்
  சிவனருளா லுயிர்மலநோய் தீர்ந்திடுமென் றுணரே.

### முப்பொருள் நித்தியத்துவம்

சூரியன் சிவன்கண் சீவன் சுடரொளி யருண்மலந்தான்
கூரிரு ளாகுங் கண்டான் கொள்ளிரு ளொளியா னீங்கிச்
சூரிய னொளிநேர் நிற்கிற் சூரிய னுமக் காலைப்
பேரிரு ளொளியாய் நித்யம் பெறுந்திரி பொருண் முத்திப்பால். (11)

ஒளிகதி ருச்சி சேரி லொளிகண்மூ டிருள்க ளைந்து
களிதன்கா லடிக்கீழ்ச் சென்று கரந்தொடுங் கியதுபோலத்
தெளிநடு நிலைய ருண்ணோர் தீதற நிற்கிற் சீவன்
விளியிருண் மலஞ்சி வத்தில் வீவற வொளியாய் மேவும்.

### முப்பொரு ளொருமை

பூரண வொளியா மீசன் பொலிந்துயிர் தோறு நிற்கக்
காரண விருண்ம லந்தான் கலந்துறுங் கருத்தே தென்னிற்
றூரணி தனின்ம ரத்திற் றங்கிடு மழனீர் போலச்
சீரணி சிவமுஞ் சீவன் செழுமல முஞ்சேர்ந் தன்றே. (13)

### பதிக் கிரியை

தன்னையுண் டாக்கிக் கொள்ளுந் தாம்விளக் கினுக்கு மில்லை
மன்னிய விளக்குண் டாக்கு மதிவிழி தனக்கு மில்லை
துன்னிய விளக்குண் டாக்கித் தொலைத்திருள் விழிக்குக் காட்டு
மன்னியன் போல வீச னவிகண் விளக்கொப் பாக்கை.

ஆணவ மலமா வெந்நோ யவைக்குடன் மருந்தான் மாவும்
பூணுநோ யாளன் கண்டு பொருந்துறுன் மருந்துஞ் சேரா
மாணரு ளதனு ேனயை மதித்தகற் றுவனும் வைத்தியன்
றூணுவு மதுபோ லான்மா மலத்துயர் தவிர்ப்ப னேக்கி.

கண்கதி ரொளியி னுதவியை மறந்து
காண்பனு னெனத்திரிந் துறினும்
பண்பினைக் குறியா தருக்கன வ் விழிக்குப்
பாயிரு ணீத்துணர்த் துதல்போல்

நண்ணுயிர் சிவத்தி னுதவியை மறந்து
நானெலா மறிவனென் றுறினு
மண்ணலவ் வுயிர்க்குற் றமதுளத் தடையா
தறிவளித் ததைப்புரப் பதுவே. (16)

அதுநீ திரைதே கம்விழுத
லைந்தாய்ப் பகுப்பர் முப்பொருளை
யதுவென் பதுவே பதிநீயென்
றறைதல் பசுவாந் திரைமலமே
விதுவார் சடையோ னருட்கரத்தால்
விவி திரைநீத் தெடுத்துயிர்க்குப்
பொதுவா முடல மளித்தழித்துப்
போக்கு மலநோய்ப் புன்கணையே. (17)

பசுக் கிரியை

தெருள்வந் தடரிற் றெருள்வடிவாய்த்
திகழ்ந்தே விளங்குந் தெருணீங்கி
யிருள்வந் தடரி னிருள்வடிவா
யிருக்கும் விழிக்கோர் செயலில்லைத்
தெருளீ ரெனினு மவையிரண்டைத்
தேரும் விழிக்கோ ரொளியுளதா
மிருடீர் முயற்சி யன்றிப
மியற்று மதுபோ லெழி லுயிர்க்கும். (18)

விளக்கொளி காட்டக் காணும் விழியென விமலன் காட்டத்
துளக்குறு மான்மா வென்னிற் றெல்சட மாஞ்ச டத்துக்
கிளைப்பற வறிவீ வானே லெச்சடங் களுக்கு மாகுங்
களக்கில்கண் சடமன் றுண்டோர் கவினொளி யுயிர்க்கவ் வாறே. (19)

கண்டா னிரவி யொளியதனிற்
கலந்தே யிருந்து மிருட்பொருளைப்
பண்டே முதலாய்ச் சுட்டியதிற்
பகுத்தே திரியு மதுபோலச்
சண்டே தில்லாச் சிவத்தினருட்
சவிபி விருந்து முயிர்போதங்
கண்டே மாயாப் பொருட்பேதங்
கருதிச் சுட்டித் திரிந்திடுமால். (20)

சற்று முயிர்க்குச் செயலிலையேற்
சாற்றுய் தனுவந் ததற்கேது
மற்றுங் கடவு டானீயான்
மலந்தா னீயா தெவரீந்தா
ரெற்றுக் கீந்தார் சனனமுற
லென்னே நூல்க ளெவர்க்குரைத்தா
ரற்ற முடையா யுயிர்க்கெனவோ
ரறிவுண் டிதனுல் வினையாய்த்தே. (21)

கண்டா னிமையாப் புடைநோக்காக்
கதிர்முன் னலர்ந்து நோக்கிபிடின்
விண்டே திரிதன் னினமான
விழியைத் தனிலே விழுங்கிடுமா
லண்டாச் சகல கேவலங்க
ளடைந்தே சுத்த நிலைசிவநேர்
கொண்டே முயற்சி யுயிர்நின்றுற்
கூட்டுஞ் சிவந்தன் னினங்குறித்தே. (22)

மலக் கிரியை

சடமல முயிரைச் செய்த தேதுசாற் றவைக்குண் டான
விடயநல் லறிவி னோடு வியன்சொரூ பறிவி ரண்டைத்
தொடருமா வார கத்தாய்த் துன்னியே முழுது மூடிப்
படர்தரு துயரா மோரேழ் பவக்கடல் படியப் பண்ணும்..

மறைத்திடு முற்றும் பொல்லா மலமுயி ரறிவை யென்றாற்
றிறச்சடக் கற்போ லியார்க்குந் தெரிவிலை யாக வேண்டும்
பிறைச்சடை முடியா னோடு பிறங்கயிக் கியஞா னத்தை
மறைத்ததே யன்றி மாயா வுணர்வினை மறையா தன்றே.

இருள்கண் ணொளியை யிரவியின்முன்
 னிருக்க வொட்டா திழுத்திடல்போன்
மருண்மா மலஞ்சி வனைச்சிவமுன்
 மருவ வொட்டா திழுத்திடுமால்
வெருவா திரவி யெதிரலர்ந்து
 விழிதா னோக்கிற் றனில்விழுங்குங்
குருவா னூலான் முயன்றருணோர்
 குறுகிற் சிவங்கோ தறவிழுங்கும். (25)

இந்தமுப் பொருளிற் சிவ னியலறி வினைம றைத்த
பந்தவா ணவம லந்தான் பதியினை மறையா தென்னே
மந்தமா ரிருளுங் கண்ணை மறைப்பதல் லாது வானிற்
சந்தமா ரிரவி தன்னைச் சவிகெட மறையா தன்றே. (26)

### மல சந்தேகவினு

ஆணவ நித்த மாகி னழிவில்வீ குறினும் பின்பு
பூணுமா னுயிரையென்னிற் பொருந்துமாம் பிஞ்சிற் பாலே
யூணினுக் கினிதாய்ப் பாக முற்றதி மதுர மாகு
மாணரு ளதனாற் பாக மருஉமல முன்போன் மாறு. (27)

மலமது கேடா மென்னின் முத்தியின் மருவா தின்பஞ்
சலமிலை யாயி னுவிற் சருக்கரை யினியா போலா
மலவெனின் முத்தி யில்லை யாமென லடாது பொல்லா
மலமதன் காரி யந்தான் மாயுங்கா ரணமா யாதால். (28)

### முத்திஐக்கிய சித்தாந்தம்

இரவிதன் னொளிகண் மேனு மிருளிந்தா தியின்கீழ்மேலும்
பரவிக்கோத் தெங்குந் தானும் பண்புபோற் பகர்சி வந்தான்

திரவுயிர் மலமைந் தெங்குந் தீர்வறத் தான்ருகை
விரவிநின் றிடுமொன் றிற்கும் வீவிலே விளையாச் சன்மம்.

இலகும் பரிதி யொளியினிற்சுட் டிறந்தே யிருந்த படியிருக்கு
மலர்நற் கணேச்சோ பாதீத வருக்கன் ருனே தானகை
விலகத் விதமாய்க் கலந்திருந்த படியே யிருக்கு மிதுபோல
நலமுத் தியினி னிலேமாணு நாஞ்சொல் படிநீ நன்குணர்வாய். (30)

எங்கும் புரண சிவத்தினுட்சுட் டிறந்தே யிருந்த படியிருக்குந்
துங்க வுயிரை நிரதிசயா நந்தா தீத தூயசிவங்
கங்கில் தானே தானகக் கலந்தே யிருந்த படியிருத்தல்
மங்க லறுநித் தியமுத்தி மாணு விதனின் மயக்கடையேல்.

## சித்தாந்த வினு

இந்தமுப் பொருளும் வெவ்வே றென்றுநித் தியமென் றேதிற்
பந்தமாந் திசைபோ லல்லாற் பரமுத்தி யென்ப தென்னே
சந்தப்பெண் புருட னேடு சருவிடத் தெழுமின் பென்று
யெந்தையேயிவர்வெவ் வேறே யிருக்கிற்றுன் பொழிந்தின் பெங்காம்.

பெண்ணுயிர் சிவமா ணின்னேர் பிரிவிற் றுன்பதும லந்தா
னண்ணுங்கூட் டரவிற் றேன்று நல்லின்ப முத்தி யின்பம்
பெண்ணெடா ணென்னும் பேதம் பேசிடிற் றேகத் தல்லாற்
பண்ணுங்கூட் டரவி னெல்லாம் பறித்தெழு மறிவி லின்பம். (33)

இன்பமே விட்ட காலத் திப்பகுப் பெல்லா மங்கே
தன்பசீ வேச யிக்கத் தார்ந்தெழின் பாதீ தத்திற்
றுன்பமார் மலந்தா னேது துன்னுயிர் சிவந்தா னேதங்
கின்பிலா விவகா ரத்துண் டிவையிலே பரமார்த் தத்தில்.

நித்திய மெனும்ப தத்திற் கருத்தநீ நிகழ்த்தென் பாயே
லுத்தியா லுண்டு நோக்கி னதுபவத் துரைக்க வொண்ணு
தெத்தினு லென்னின் வேத மிசைத்ததத் வைத மென்று
சுத்தவா கமமுஞ் சோகம் பாவனே சொல்லிற் றன்றே.

சீவன் சிவமென் றிரு பொருளுஞ்
 சித்தி னமிசத் தொன்றேயாந்
தாவுங் கண்ணுங் கதிரும்வெய்ய
 தழலி னமிசத் தொன்றன்றோ
வீவின் மலவல் லிருளுமதை
 விழுங்கு மருளும் பொருளொன்றும்
பாவு மிருளு மதை விழுங்கும்
 பகலி னொளியும் பொருளொன்றே. (36)

கண்ணுங் கதிரு மமிசத்தாற்
 கருதப் படுமோர் பொருளென்ன
நண்ணுந் துயர்செய் யிருளொளிக
 ளவையா மொன்றென் றுரைத்திடுதெ
லெண்ணுஞ் சிவமு முயிருமொன்று
 மெவ்வா றருளு மலமுமொன்றுங்
கண்ணுங் கதிருங் கலந்திடுங்காற்
 கரிய விருளு மொளியாச்சே. (37)

உற்று நோக்கி லிருள்கண்க
 ளொளியார் கதிரு மோர்பொருளே
சொற்ற மலமு முயிர்களுநற்
 சோதிச் சிவமு மோர்பொருளே
பெற்ற பந்தம் பேதிக்கப்
 பேசுங் கான்முப் பொருள்வேண்டும்
வெற்றி முத்தித் திசைதனிலே
 வேண்டா வவைகண் மேவாவால். (38)

பந்தத் திசையின் முன்சொன்ன
 படிமுப் பொருளுங் கொளக்கடவாய்
சந்த முத்தித் திசையின்கண்
 சாற்றல் பழுதா கமவேத

மெந்தை யுரைத்தா ரெதைத்தளலா
மெத்தைக் கொளலா மவிரோதஞ்
சிந்தைக் கினிதா மிவையிலொன்றிற்
சிக்கின் விரோதந் தீராதே. (39)

பந்தத் திசையில் வேண்டுவதென்
பரமார்த் தத்தில் வேண்டாதெ
னெந்தத் தடமா யினுந்தடமொன்
றிசைத்தல் வேண்டு மீசனுரை
மைந்தா பந்தத் திசைநின்றாய்
மன்னு முனது தற்போதத்
தொந்த மிறந்த திசைதனிலே
தோன்றுஞ் சங்கைக் குத்தரமே. (40)

நண்ணுமறி வாநந்த வுருவாக விளங்கு
நற்பரம குருநயன பாஷையத னாலே
யெண்ணியவிம் முப்பொருளி னியல்புரைக்கப் பெற்றோ
ரேகாந்தத் தலத்துண்மை நிட்டையினை யெய்தி
யுண்ணிகழுங் கருவிகர ணாதியெலா மொடுங்கி
யுன்போதச் சலனவுபா திகளொழியா முன்னே
புண்ணியமும் மூர்த்திகள்வந் துரைத்தாலும் பந்தம்
போகாதா லுண்மைநிலை பொருந்தாதென் றுணரே.

செவ்விதின்மெய்ந் நிட்டையுற்று மண்முதனா தாந்தஞ்
சேர்கருவிக் குருவதெரி சனஞ்சுத்தி செய்தே
வவ்வியெழு சகலவா தனையொடுகே வலத்தின்
வாதனையு மற்றுசுத்த மருவியிடிற் றோன்றுந்
திவ்வியநற் றிருவருளா லிவைகளைக்கண் டகன்ற
சீவனுமு னைச்சிவத்தை மலத்தினையுந் தெரிந்தே
யவ்வுணர்வு மவ்வருளே யாகிபரை யணைந்தா
லாநந்தச் சலதியெழுந் தமிழ்த்துமுனை யறிதி. (42)

பஞ்சாக்கரவிதி

பிஞ்சிள மதிசூ டெம்மான் பேருரு வெழுத்தா மைந்தும்
விஞ்சிய சிவவ சிப்பால் விளங்குயிர் நடுவா யித்தைத்
தஞ்சமென் றடைந்து போற்றிச் சற்குரு வருளாற் பெற்றே
நெஞ்சமோர் வழிநி றுத்தி நினையாது நினைக மாதோ. (43)

சாம்பிரதாயம்

கொத்தல ரிதழிப் பெம்மான் குருவடி வாகி முன்னாண்
மெத்துசந் தானக் குன்றின் மேவுமா லடியிற் போதன்
புத்திரர் தங்கட் கிம்முப் பொருளியல் புகன்று ளிக்கான்
முத்தைய குருவாய் வந்தென் முமலவே ரறப்போ தித்தான்.

இன்னவாந் திரிப தார்த்த வியல்பினைப் பிண்டத் தானு
முன்னிய தொகைவ கைத்தா யுறுமிலக் கணத்தான் முத்தி
நன்னிலை யுறத்தாள் சூட்டி நயனபா ஷையினு ளயேன்
முன்னைமா மலங்க டர மொழியாது மொழிந்தான் மாதோ.

வாழி

அத்துவிதந் துவிதம்வி சிட் டாத்துவித முறைக்கு
மவ்வவர்முத் தியுமிதனி லடங்கிடுமற் றினுமோர்
தத்துவமு முத்திநிலை தானுமிலை யமிர்தத்
தண்கலைச்சந் திரமௌலி தன்றுணிவு மிதுவே
சத்தியஞ்சத் தியநமது சந்தான குரவர்
சாற்றியது மித்துணிவாஞ் சங்கையொழி யெனவென்
மத்தகத்தி லத்தம் வைத்த முத்தையசற் குரவன்
மல்குமருள் வாழியென்றும் வாழிமலர் விழியே. (46)

திரிபதார்த்த வுண்மை உபதேச விளக்கம்

முற்றிற்று



உ

சிவமயம்

விருத்தாசலம்

ஸ்ரீ குமாரதேவர் திருவாய் மலர்ந்தருளிய

# பெரிய நாயகி யம்மை பதிகம்

.......o.......

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

விரிவுறு முருவ நாமம தகற்றின்
விடயங்கள் விளங்குறு விதனான்
மருவுறு பொறிபோம் பொறியறக் கரண
மாய்ந்துறுங் கரணமாய் தலினாற்
புருடன்முன் னேழுஞ் சுத்தமோ ரைந்தும்
போமிதாற் சச்சிதா நந்தங்
கிரியையற் றிலங்கு மென்றனள் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 1

உளப்படு முருவ நாமம தகற்றி
னுள்ளசற் சிற்சுகந் தோன்றும்
வளப்படு மிதனு லுலகுகண் ணுடி
வருநிழ லாநிழன் மறிந்தால்
விளக்குறு ஞான வெளியதா மிதனின்
விளையுமின் பெனவெனக் கிசைத்தாள்
கிளக்குறு தவத்தோர் தரித்துறை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 2

பழுதையென் றுணரிற் றன்முனர்த் தோன்றும்
பாம்புமப் பழுதையா மதுபோன்
முழுதுண ரறிவாந் தன்னையே காணின்
முாணுறு சராசர மெவையு

மெழுதரு மறிவாய் விளங்குமென் றிசைத்தா
ளெழுபவர் துடைத்தெனை யளித்த
கெழுமணி முத்த நதிசெறி விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 3

சொருபமே தானென் றுணர்தரிற் பரனுந்
துகளுறு சிவனுஞ் சகமு
மருவுதன் னினைவி லெழுந்தமிக் தைகளாம்
வந்திடு பந்தம்வீ டிலவா
மொருவுயிர் தானென் றுணரிலம் மூன்று
முளபந்தம் வீடுமுண் டென்றாள்
கிரிதவப் பயனாய் வருமொரு விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 4

அறிபொரு ளறிவோ னறிவினைக் கொடுப்போ
னைமுப் பொருளுமோர் விடயம்
பொறியுறப் பிடித்தா லுளவிதை விடுத்தோர்
பொருளொநா டுதன்முன ரிடையே
பிறிவறத் தோன்றுஞ் சொருபமிந் நிலையிற்
பேசுமுப் பொருள்களு மிலவாங்
கிறியற வற்றி யென்றனள் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 5

அரவிலை பழுதை யுணர்ந்தவர்க் கதுபோ
லகிலமெய்ப் பொருளினை யுணர்ந்தோர்க்
கொருவுரு திருத்த லெனையெனிற் கான
லாறுசல மிலையென வுணர்ந்தும்
மருவலி னுறு விகாரமே தென்னின்
மலிகன வினிலுறு மென்றாள்
கிருதுசெய் மறையோர் பரவிய விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 6

தடத்தின் மற்றதனிற் றங்குபல் கடத்திற்
சாயையுஞ் சாயையில் லதுமாய்த்
திடத்தொடு விளங்கும் விசும்புபோ லீசன்
சீவனிங் கிருவர்சாட் சிகளா
மிடத்துறும் பிணையிற் றேன்றுறுஞ் சிவமிங்
கிருவர்சாட் சிகளுமொன் றென்றுள்
கிடைத்தநன் னிதியா யெனக்குறும் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 7

ஆருயிர் தானு மவன்மனந் தைசத
வகங்கரத் துதித்தது வாகும்
பேருயிர் சாட்சி யானவன் மனமோ
பின்னையா மாதலா லவற்குக்
கூருறு முலக மயக்கமா மிவற்குக்
குறித்ததன் லீலையா மென்றுள்
கீரனை யளித்தோற் குவந்ததாய் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 8

ஓதுறு நாம மகற்றிடிற் றேன்று
முள்ளச ற்சிற்சுக மிதுவே
தீதறு சீவ சாட்சியிங் கிதனைத்
தெரிந்திடுஞ் சீவனு மிதுவா
யேதமொன் றில்லாப் பிரமமா மென்றெ
னிருளற வருள்புரிந் தளித்தாள்
கேதமி றவத்தோர் சூழ்தரும் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 9

எஞ்சுறு முளத்தோ டென்னையா ரென்றே
யிரங்கியே திரிந்துழல் வேனை
மஞ்சுறழ் கரத்துக் கன்னனைக் குந்தி
மகனென வுணர்த்துதல் கடுப்ப

வஞ்சலென் றழைத்து நீயது வாகு
மையமின் றென்னவே யளித்தாள்
கிஞ்சுக வாயா னஞ்சிட விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 10

பெரியநாயகி யம்மை பதிகம் முற்றிற்று



உ

சிவமயம்.

திருப்போரூர்

ஸ்ரீ சிதம்பரசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# குமார தேவர் நெஞ்சுவிடு தூது

காப்பு

தஞ்சமென்றோர்க் கின்பந் தருகுமர தேவன்மே
னெஞ்சுவிடு தூது நிகழ்த்தவே—விஞ்சும்
பழமலைவா ழாழத்துப் பாழிமத வேழக்
கழலிணைவா ரீசமே காப்பு.

கலிவெண்பா

பூவாய்த்த கற்பகப்பூம் பொங்கரிடத் திற்சிறந்தோன்
றாவாய்த்த செங்கமலத் துள்ளிருந்தோன் - மாவாய்த்த 1
மார்பகத்தோ னுகமுற்றோர் வஞ்சகக்கூற் றைக்கடந்த
சீர்மிகுத்த காயத் திறன்முனிவோ - ரேர்மிகுத்த 2
மாணிக்கப் பைவிரித்து வாழுரகர் பாருரைவோ
ராணிப்பொன் போன்றமறை யாகமங்கள் - பேணி 3
புருவே யருவே யொளியே வெளியே
தெருளே யருளே சிவமே - பொருளேயென் 4

றேத்துஞ் சுகசொருப மின்னருளே யோர்வடிவாய்
நாத்துதிசெய் பேரு நயந்தருளி - தீர்த்தனென 5

வந்தபிரா ஞயேன் மலதிமிரம் போக்குதற்கென்
சிந்தைகுடி கொண்ட செழுஞ்சோதி - வந்தனைசெய் 6

யன்பர்க் கெளியா னதிகரே யாயிடினும்
வன்பர்க் கரிதாய மாணிக்க - மன்புக்க 7

மந்தரமே மத்தாக வாசுகியே நாணகச்
சந்திரன்றா ணுக்கடலே தாழியா - வந்தரர்தம் 8

வன்பிற் கடைய வருமமுதம் போன்றெழா
தன்பிற் பெருகியெழு மாரமுதந் - துன்பத் 9

திரையாழி வீழ்ந்தவரைத் தீதறியா முத்திக்
கரைமேல் விடுக்குமொரு கப்பல் - விரவிவரு 10

மாகமே யாதி யநேகபிர பஞ்சமெலா
மேகமாய்க் காட்டு மெழிற்சித்தன் - மாகசுர 11

ரேமாக்க வெம்மனோ ரியாரு மிறுமாக்கக்
கோமாக் கருணைமழை கூர்மேகம் - பாமரருங் 12

கண்ட பொழுதே கசிந்துகசிந் துள்ளுருகித்
தொண்டுசெய மேவுஞ் சுவைக்கரும்பு - பண்டு 13

பிரம னகந்தை பிறங்கா தடங்கப்
பரம வொளியாய்ப் படர்ந்து - சிரமனந்த 14

கோடி படைத்துக் குலவுலகெ லாந்தானுய்
மூடிநிலை பெற்ற முதுகிரியா - னீடிக் 15

குறிஞ்சியு ணின்று குறவர்குடில் சாடி
மறிந்துவிழ மாலியானை மாய்த்துச் - செறிந்த 16

வகிலுங் கழைமணியு மந்திரையா லுந்திச்
சிகிநிறச்செம் பாலைவெப்பந் தீர்த்துப் - பகாரிய 17

முல்லை புகுந்து முடைகெழுமு மாய்ச்சியர்தம்
பல்லையொத்த முல்லை பறித்தெறிந்தங் - கொல்லை 18

தயிர்ச்சாடி மத்துடனே தாங்கி மருதத்
தியற்பள்ள ரார்ப்ப வெழுந்து - வயற்புடைக 19

ளேரி குளங்க ளெலாநிறைத்து நெய்தனிலஞ்
சார வெழுந்து தரும்பரவர் - நேரும் 20

வலைமலையெ லாந்துணித்து வன்படவு தள்ளிக்
குலவுகட லோடுறவு கொண்டு - நிலவலைய 21

மாழமொடு நீள மளத்தற் கரிதாகி
யேழ்கடல் வெள்ள மெனச்சிறந்து - மூழ்குமவர் 22

தம்மை யழுக்கறவே தான்றுடைத்த லன்றியுயிர்
வெம்மை யழுக்கு மிகத்துடைத்து - செம்மைதரு 23

வீட்டின்ப வெள்ளத்து மேன்மைபெற வேமூழ்க
நாட்டுமணி முத்தா நதியுடையான் - மீட்டறிய 24

மெத்து கடமாதி வெறும்பொய்க் கதிட்டானச்
சத்தெனுமோர் மேன்மைத் தருநாடன் - மொய்த்து 25

வரும்பே ருருவமாய் மன்னுபொரு ளெல்லா
மொருங்கே சுகமான வூரான் - விரும்பியமெய்ப் 26

பத்திப் பழவடியார் பைந்தமிழ்ச்சொன் மாமலரால்
வத்திக்கக் கட்டுபா மாலையான் - முத்திபெற 27

வோரறிவு காணுமிடத் தோன்றென்றுஞ் சுட்டாது
சேரறிவாய் நின்றமனச் செம்பரியா - னேர்மருவு 28

பக்குவநான் கானபெரும் பாதங்கள் சோதிதர
மிக்கமறை யாகமமாம் வெண்மனிகொண் - டுக்காத 29

விச்சைஞா னங்கிரியை யென்னுமுத்தா னம்பொழிந்தங்
கச்ச மறத்துறத்த லாசையறற் - றுச்சமறு 30

கோடாக வேந்திக் குளிர்கருணை மெய்யுணர்வாம்
வீடாத கண்கண் மிகவிழித்துச் - சேடா 31

ரிரண்டற்ற வத்துவித மென்னுங்கை நீட்டித்
தெருண்டதவம் பத்திச்செவிகொண் - டிருண்டபெருந் 32

தத்துவசா லங்களெனுஞ் சாற்றுங் கவளமுண்ட
சுத்தமெனுஞ் சீர்வாய் துலங்கவே - பொய்த்த 33

கருமவீக் கூட்டங் கடியாது வீசுந்
தருமமா நல்வா றயங்க - வொருமையிலா 34

வாறு சமயக் குருட ரறியாத
வீறுபரி பூரணமா மேனியுடன் - கூறுமலம் 35

போக முனிந்துயிரின் போதமழித் துத்தோன்று
மாகமிக ளேத்துமறி வானையான் - றூகமுடன் 36

வந்து தனையடைந்தோர் வன்பவநோய் தீர்ப்பதற்கே
யந்தமறக் கட்டு மருட்கொடியான் - சந்ததமுஞ் 37

சேம நிதிபோற் றிகழ்மறைநான் கிற்சிறந்த
சாம மறையாந் தகுமுரசோன் - காமர்செறி 38

கஞ்சனும் வேளுங் கடுங்கூற்றுந் தன்னடியார்க்
கஞ்ச நடாத்துதிரு வாணையான் - விஞ்சியபே 39

ரின்ப முளந்ததும்ப வெல்லோருங் கொண்டாடு
நன் குமர தேவனெனு நாமத்தான் - மன்பயிலுஞ் 40

சாதனநான் கானபெருஞ் சம்பத்தைக் கைப்பிடித்து
மாதன மாதர் மனைதுறந்து - தீதறுசீ 41

ருள்ளிருந்த ஞானம் புறனு முதித்தாங்கு
வெள்ளைநிற நீறணிந்து மேனியெலாங் - கள்ளமுறு 42

காமனை வென்றதிருக் கண்ணிற் பிறந்ததனல்
யாமவனை வெல்வதற்கி தாமென்று - தோமறுசீ 43

ரக்கமணி மாலை யதுதரித்து மவ்வுறுப்பின்
மிக்க பணியாய் மிகப்பூண்டு - தொக்கபகை 44

கொல்வார்மஞ் சட்டோய்த்துக் கூறைகொளு மாறவித்தை
வெல்வான் கருதும் விருதாக - நல்லசெக்கர் 45

காவிதோய் துண்டங் கருதுமுழ நான்குகட்டி
மேவுகரு விப்படையை வெல்வதற்குத் - தாவிலாக் 46

கச்சைகட்டி னற்போற் கனவுதர பந்தனமே
லெச்சமறக் கட்டி யிடர்ப்பிறவி - யச்சம் 47

பிரிந்ததெனக் காட்டுமொரு பெற்றிபோற் றேன்றும்
விரிந்தசடை பின்றாழ விட்டுத் - திருந்து 48

மூயிரங்க மீதி லுயர்பரம லிங்கஞ்
செயலறவே தோன்றுந் திறம்போற் - பயனுர் 49

மருமத்தி லிங்க மகிமையுடன் றூங்கிக்
கருமத் துரிசு கழன்றே - யொருமித்த 50

நெஞ்சுடனே வீடுதொறு நீடுபிச்சை யேதெனினும்
வஞ்சமற வேகரத்தில் வாங்கியுண்டு - விஞ்சுங் 51

குருபர னுமக் குமாரதே வன்பாற்
றிருவடிபெற் றஞ்ஞானந் தீர்ந்தே - யுருநாம 52

முள்ளவெலாஞ் சற்சிற் சுகமா வொருங்குணர்ந்து
தெள்ளியபே ரின்பவெள்ளந் தேக்கியே - விள்ளலிலா 53

தெல்லாஞ் சிவமாய்க்கண் டேபெற்ற மாதவரு
மல்லார் திருவுடனே வாழ்ந்தானு - நல்ல 54

விடையன்பாற் கும்ப மிருஞ்சென்னி தாங்கித்
தொடருமறிக் குட்டியுடன் றேற்பை - புடையெடுத்துக்

கம்பளந் தண்டாதி கைக்கொளினு மச்சென்னிக்
கும்பமிசை நெஞ்சுவைத்த கொள்கைபோ - லெம்பிரான்

ருளிலே நெஞ்சுவைத்துத் தாங்குடும்பி போனடிக்கு
மீள்கிலா வன்புடைய வித்தகரு - மாளாத் 57

தகைமையுடை யோராய்த் தக்கபணி செய்தே
யகமு முகமுமலர் வாருஞ் - சுகசொருப 58

மொன்றென்றே சொன்ன லுலகமே தென்றிடவே
நின்ற பழுதையிடை நீளரவ - மன்ற 59

வுதிக்குமா றப்பொருளி லுண்டாமென் றேத
விதித்த பழுதை விளங்கின் - மதித்தபாம் 60

பேகு மதுபோ லெழிற்சிவங்கண் டும்முலக
மோகாதி தோன்ற லெனையென்ன - மோகமறக் 61

கானலினீ ரில்லையெனக் கண்டுநீர் தோன்றுதல்போ
லீனமில்பொய் யாத்தோற்று மென்றிசைப்ப - வான 62

பழுதையினிற் பாம்பும் பகர்கான னீரு
மெழுமோர் தகையா யிவைதாங் - குழுமியே 63

நானவா யோர்பொருளி னண்ணுவதே தென்றிசைப்ப
வானதை பொன்மண்ணி லாபரண - நான 64

கடமாதி தோன்றுமொரு காரணம்போற் றேற்றுந்
திடமாநீ காணென்று செப்பத் - திடவா 65

ணொருவன் றெழிலா லுளவா மிவைதா
மருவுமிவை யாவரால் வந்த - துரையெனவே 66

விண்ணினிடைப் பீலி வெயிற்குஞ்சந் தோன்றுவபோ
னண்ணு மெனவே நயந்துரைப்ப - வெண்ணுமவை 67

பற்பலவா ஞலும் பகருருவொன் றுமிவைதாந்
துப்புடைநா ணுவுருவாய்த் தோற்றுவதென்-செப்புகென

காந்தருவ மாநகர்போற் காணெனவே யந்நகர்தான்
போந்தவிவ காரமின்றேய்ப் பொய்யாகு - மேய்ந்த 69

விவற்றுள் விவகார மெய்வதெவ னென்னக்
கவற்றுள் கனவுவிவ கார - நவிற்றுதல்போ 70

லாமென் றுரைப்ப வதுநினைவின் வாதனையாந்
தோமுறுபொய் வாதனைதான் றாய்தாய - சேமப் 71

பொருட்கே தெனவந்தப் பூரணத்திற் றேன்றுந்
தருக்கா நினைவாகுந் தானென் - றுரைப்ப 72

வதற்கு நினைவெழுமோ யாதென்று கேட்பக்
கதித்த கனவிலே கண்டா - யிதைப்பொய்யென் 73

றன்னுது கேட்டி யுளஞ்சற் றசைந்தக்கான்
முன்னும் பரமுயிர்கள் மொய்த்தெழுந்த - மன்னு 74

வுலகமிவை தோன்று முளமிறந்தா லிந்தக்
கலகமெலாம் பொய்யாய்க் கனதை - யிலகியதோர் 75

மெய்யொன்றே யாகு மிளிரும் முளத்துருவ
னையா வுருவமொடு நாமமாம் - பொய்யுளந்தா 76

னுன்னினைவு திதென்றே யூகத்தா னேக்குமிடத்
தந்நினைவு நாமவுரு வாகுங்கா - ணந்நினைவு 77

கோடி கணத்திற் குதித்தெழலா லிவ்வுலகு
நாடற் கருவுருவ நாமமாய்ப் - பீடுபெறத் 78

தோற்று நினைவைத் துணித்தாற்சற் சிற்சுகமே
மாற்றற் கரிதாய் வயங்குறுஞ் - சாற்றுமிதா 79

லுள்ளமே யிவ்வுலகா மிவ்வுலகே யுள்ளமா
முள்ளமலா தேயுலக மொன்றில்லை - யுள்ளே 80

மதுரக் தருஞ்சாத்தன் வன்கோயின் முன்னே
சதுரங்க மாபலமாத் தங்கும் - குதிரைகரி 81

தேரா ளெனும்பெயருஞ் செப்பியபேர் கொள்ளுருவு
நேராது பொய்யென்று நீக்கியே - தேருமிடத் 82

றற்றிடுமுக் காலத்து முள்ளமண்ணே மற்றெல்லாம்
வெற்றவெறும் பொய்யாய் விடுமிவைபோற் - சொற்ற 83

பெயருருவ மானவெல்லாம் பேணுது நீக்கிற்
செயிர றுசித் தொன்றே திகழு - மியல்பாங் 84

கடலிற் றிரை நுரை காண்டிவலே மொக்கு
ளிடமுற் றெழினு மிதுபொய் - திடமுறுமெய் 85

யாவ தெதுவென் றறியுமிடத் தப்பொருளின்
மேவு திரை நுரை வெண்டிவலே - தாவியெழு 86

மொக்கு ளெனும்பெயரு மொழிபெயர்கொள் ளும்முருவு
மொக்கவெறும் பொய்யா முருசியுடன் - றக்க 87

நெகிழ்ச்சி குளிர்ச்சிமய நீரொன்றே மெய்யாம்
பகுக்கு மவைபோலப் பாரிற் - றெரிகைக்கரிதாய்க் 88

காணுமுரு நாமங் காணுது பொய்யாகு
மாணுறுசற் சிற்சுகமே வாய்மையாம் - மாண 89

இருப்பதுசத் துச்சத்தா லெண்ணுருவ நாம
மிருப்பதுபோற் றோன்றும்வே றில்லை - யுரைப்பரிதாய்த்

தோன்றுதல்சித் துச்சித்தாற் றோன்று முருநாமந்
தான்றனித்துத் தோன்றுவது தானில்லை - யான்றசுகந் 91

தானே யுளதிதனாற் றங்கு முருநாம
மானு சுகம்போ லணுகியிடு - நானேதை 92

வேறேது மில்லை விரிதிரை யாதிகடாங்
கூறுசல மொன்றே குறிக்குங்காற் - றேறிற் 93

பொருளொன்றே யாகும் புனிதமுறு நெஞ்சாற்
றெருளொன்றிக் காணென்று செப்ப - வருளொன்று 94

நெஞ்சுடையா யென்று நிகழ்த்திவழுத் திப்பணிந்து
தஞ்ச மெனப்பொருந்திச் சார்வாரு - மெஞ்சலிலா 95

தெம்மருங்குஞ் சூழ்ந்துவர வின்னியங்க ளேவகையின்
சும்மைக் கடலின் றொனிகாட்ட - மெய்மைதரு 96

மோரார் பரிபூரண வின்போர் வடிவாகிப்
பேரோத வந்த பிரான்வந்தான் - சூரான் 97

மிடியா யிருள்போக்கு மேதகையான் வந்தான்
வடிவா றுவமையிலான் வந்தா - னடியார் 98

பவத்துயரை மாற்றப் பரிந்துவந்தான் வந்தான்
றவத்தலைவர் சற்குரவன் வந்தா - னுவக்கு 99

முதுகிரியான் வந்தான் முகிலனையான் வந்தான்
வதிதலுறு பேரின்பன் வந்தா - னதிக 100

கவிராஜர் போற்றுங் கழைகழலான் வந்தான்
றவிராத தண்ணளியான் வந்தா - னவியாத 101

ஞான கிரணமுறு நற்சூரி யன்வந்தா
னீனமொன்று மில்லா னிறைவந்தான் - றேனனைய 102

நற்குமர தேவனெனு ஞானபரன் வந்தானென்
றெற்பெருகு சின்ன மெடுத்தியம்பச் - சொற்பிரமன் 103

முன்னோ ரனமாய் முடிகாணே னீண்டிரண்டே
மூன்னமாக் காண்குவலென் றூங்கெழல்போல் - பொன்னார்

கவரி புடையிரட்டக் கண்டோர்க் கிவனைத்
தவறில்லை யில்லையென்று சாற்று - முவமையா 105

லாலவட்டம் வீச வடியார்க ளங்கநோய்
சாலவொட்டா தோட்டுந் தகைமையா - யேனு 106

மெனது களங்கமுந்தி ரென்றிந்து வந்து
தனதுபணி செய்யுந் தகைபோ - லினமருவு 107

முத்துக் குடைநிழற்ற முத்திபெற வேண்டுமென்றே
ரித்திசைவா ரீர்வாரீ ரென்றென்று - மொய்த்து 108

கரத்தா லழைப்பதுபோற் கானூர் கொடிக
ளுரைத்தாற்போ லெவ்விடத்து மோங்க - வுரைப்பரிய
மெய்யர்கர மாமேக மென்மலர்க ளாம்பெரிய
துய்யமழை யெங்குஞ் சொரியவே - செய்ய 110

மறைமுடிவு காட்டு மணியே யெமது
குறைதவிர வந்தபெருங் கோவே - நிறையு 111

மதியே செழும்பாகே வானமுதே கீரே
தகியே யுலகுயிர்க்கோர் தாயே - கதியேயெந் 112

தாதையே செந்தருவே தண்ணளியே நாயடியேன்
றீதையே போக்குமிருந் தெய்வமே - யோதுட் 113

டிமிர திவாகரனே செய்யமுது குன்றிற்
குமரதே வேயென்று கூறித் - தமிழ்தெரிந்த 114

வந்திகர்பல் லாண்டிசைப்ப மாமகர தோரணமுஞ்
செந்திருவு மோங்குந் திருமறுகி - லந்தணளி 115

மோனந் தயங்கி மொழிபொருளெல் லாந்தானு
மானந்த போதகமீ தாங்கேறித் - தானந் 116

தவங்கள் சிறப்பத் தகு குமர தேவ
னுவந்து பவனிவர வுற்றே - நவஞ்சேரு 117

மவ்வீதி யுள்ளோ ரனைவோரும் வந்துவந்து
செவ்வி பெறவே செறிந்தெங்குந் - தவ்வாத 118

விம்மேனி கொண்டதிவ னெம்மனோ ருள்ளிருந்த
பொய்ம்மையற வென்றே புகழ்வாரு - மெம்மானே 119

யோர்வடிவு கொண்டதிது வுண்மையா மெங்ஙனெனி
லேர்வடிவாற் காணலா மென்பாருந் - தேர்வரிய 120

பூரணமா நோக்குவிழிப் புண்டரிக னென்பாரு
மேரிணங்கு பேரின்ப னென்பாருஞ் - சீரிணங்கு 121

கற்ரோர்க் கினிய கரும்புகா ணென்பாரு
முற்ரு னெமக்கிவனென் ரோர்வாரு - முற்ரு 122

விளமையா னென்பாரு மெம்போல்வார்க் குற்ற
வளமையா னென்பாரு மாகிப் - புளகமுடன் 123

கொள்ளப் பணிந்தவர்கள் கொண்டாடும் வேலேதனி
னள்ளத் தமியேனு நண்ணியே - விள்ளாது 124

மின்றிரண்டு மொய்த்ததொரு மேன்மைபோ லேமிளிருந்
தென்றிரண்டு பின்ருழ்ந்த செஞ்சடையு - நன்றிதரு 125

மூன்று பிறைநிரையா மொய்த்ததெனப் புண்டரஞ்சே
ரான்றதிரு நெற்றி யழகினையுந் - தோன்றுந் 126

துளக்க மிலாமதிபோற் சோதி முகமும்
வளக்கமல நோக்கிணையின் வாகுங் - கிளக்குமறை 127

யஞ்ச முதித்தங் கழகுதரு நாசியையும்
விஞ்சோர் மொழிமலர்வாய் மென்னகையுந் - தஞ்சமுறு

மந்தர மோரிரண்டின் மாமுடிமே லோரிரண்டு
சுந்தர பானு துலங்குவபோற் - சந்தமுறுங் 129

காதிணையிற் பூண்ட கனகசெப்புக் குண்டலங்க
ளுதறவே காட்டுமிரு திண்புயமு - மோதவிடம் 130

போக்கி மிளிறும் புனிதத் திருமிடறு
நோக்கிணைக்கின் பென்ற நுவன்மார்பு - நீக்கரிதா 131

மையர் திரிவகற்றி யச்சமற நிச்சயஞ்சொற்
செய்ய புறை கொண்ட திருக்கரமு - மையனுறு 132

சிவ பரமிரண்டுந் தேருமிடத் தேகமென்று
மேவியசின் முத்திரைகொண் மென்கரமுந் - தாவிலாச்

செக்கர்வா னம்பவளச் செம்மலையைச் சூழ்ந்ததுபோற்
றக்கா வித்துகில்சேர் தண்ணிடையுந் - தொக்கவதின்

மேலொருமின் சூழ்ந்து விளங்குதல்போ லத்திகழு
மேலுதர பந்தனத்தி னின்னழகுஞ் - சாலவே 135

பற்றி விடாத பழவடியார்க் கின்பவெள்ளம்
வற்ரு தளிக்கு மலர்ப்பதமு - நற்றவரு 136

மாணிக்க மால்வரைமேல் வண்டூசு போர்த்ததுபோற்
காணத் திருநீற்றுக் காப்பணிந்தே - யாணிப்பொன்

மேனியையு மம்மேனி மீதிலே யக்கமணி
யானியிலா லிங்க மமைத்ததையு - நானேதக் 138

கண்ணிணைக்கோ ரின்னமுதாக் கண்டு பணிந்தேத்தி
யுண்ணினைவு தோன்ரு துறுபோதி - லெண்ணவொணு

மெய்யரெலா நிற்ப வினையேனைத் தானேக்கி
யையனருண் மாலளித்தா னன்றுமுதற் - றய்ய 140

வவன்றருமின் பம்பெறவே யாசைமிகக் கொண்டே
னுவந்தவன்பாற் றாதுவிட வுன்போ - னிவந்த 141

கடல்சூ ழுலகனைத்துங் காண்கிலே னெஞ்சே
யிடர்போக்குந் தூதாநீ யின்று - திடமாகச் 142

செல்லவே வேண்டுஞ் சிறியே னுயிர்த்துணையே
நல்ல வெனக்குதவு நாயகமே - புல்லறிவா 143

ளுயேன் பிறந்திறந்த நாளெல்லா மென்னுடனே
நீயே பிரியாது நின்றதனை - னீயேயென் 144

ருதையுந் தாயுந் தமரும் பெருநட்புஞ்
சூதையே செய்வார் துணைவரோ - நீதயவா 145

யென்பா லொருமித்திங் கேகாந்த மாயிருந்தா
னுன்போனு மென்போனு மொப்பாரா - ருன்பெருமை

யாகமமு மாரணமு மான பலகலையு
மியோகிகளுந் தாமே யுரைக்குங்காண் - மோகக் 147

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டென்
றுரைத்த தானுமைக்கென் றுன்னி - விரித்து 148

புகழ்ந்த தலவே புகலரிய நெஞ்சே
மிகுந்த பிறப்புவீ டென்னுங் - தகுந்தொகைக்குக் 149

காரணமு நீயே கருது முலகமெலா
மேரிணங்கு நின்னையல்லா தில்லைகாண் - பாரிணங்கு 150

நீசற் றசைந்தா னிகழு முலகாகு
நீசற்றுந் தோன்றாது நின்றக்கால் - மாசற்ற 151

மெய்ச்சிவமே யாகு மிளிருமிதா லுன்பெருமை
யச்சிவந் தானே யறியுங்காண் - மெச்சு 152

முறவா லுயர்வா லுனைப்போ லெனக்குப்
பிறிதா ருளரதனாற் பேணி - யறவாழி 153

யான் குமர தேவன்பா லன்புடனே தூதுசெல்ல
நான்கருதி யுன்பா னவிற்றினேன் - யான்புகலு 154

மவ்விறைவ னென்று மமருமிடஞ் சொல்லக்கேண்
மௌவன் மணக்கு மலர்ச்சோலை - செவ்விதரு 155

முத்தா நதிசூழ் முதுகிரியா மாங்குநீ
வித்தார மாய்ச்செல்லும் வேலைதனிற் - கத்துஞ் 156

சமயரெனும் பொய்வேடர் தம்மைமிக நாடி
யமருமுற வாமென் றணுகேல்-கமைவி 157

லரிவையர்தா மென்றியம்பு மாமாவை நாடேல்
கருது விடயமெனுங் கானின் - மருவு 158

நெறிதப்பிப் போயதனு ணின்று மயங்கேல்
பொறிமத்த மாவொடுபோ ராடேல் - செறிவுற்ற 159

காமமெனும் பங்கத்திற் காலிடேல் கோபமெனுந்
தூம வழன்மிதித்துத் துள்ளியிடே - ளுமவுரு 160

முன்பின் புடைபெயர்ந்து முன்னிநோக் காதேகி
யன்பெலா மோருருவே யானவரு - மின்பமய 161

மாகி யிருப்போரு மரியதவச் செல்வர்களு
மேக மெனுந்துணிவை யெய்தினரு - மோகமறு 162

வீரசைவ நாயகரும் வேத முனிவரரு
மோரா கமசைவ வுத்தமரும் - பாரோரு 163

நாற்றிசையுஞ் சூழவவர் நாப்ப ணுடுச்சூழ
மேற்றிகழு மிந்து விளங்குதற்போற் - போற்றுங் 164

குமாரதே வென்னுமோர் கோமா னிருப்ப
* னமாவென் றவன் சபையை நாடி - யெமாலன்பு 165

தன்னடிக்கீழ் வைக்கத் தகுகருணை செய்தானைப்
பொன்னடியென் சென்னி பொறித்தானை - மன்னு 166

பவளமலை யுபய பாரிசத்துஞ் செம்மை
திவளருவி தூங்குந் திறம்போ - னவமார் 167

கழுநீர்த் தொடையல் கலந்த்புயத் தானை
வழுநீத்த பாமாலை மன்னைத் - தொழுவார்க்கு 168

வேண்டிய வேண்டிய வெல்லா மிகவளிக்கு
மீண்டிய தெய்வ விருந்தருவை - மாண்டறியா 169

வானந்தச் செல்வ மளிக்குஞ்சிந் தாமணியை
வானந் துதிக்கவரு மாதவத்தைத் - தீனனே 170

னேதுபிழை செய்தாலு மேழையே னுக்கிரங்கித்
தீதனிவ னென்னாத தெய்வத்தை - யோதும் 171

பழமலையான் பாகம் பதியா விளமை
யழகுடனே வாழுமுமை தம்மை - வழுவாது 172

தந்தசச்சி தானந்த சாகரத்தி னூடாடுஞ்
செந்திருவா ழுங்குமர தேசிகனைச் - சிந்தைநீ 173

---

* நமா=நமஸ்காரம்

பொன்னே மரகதமே பூரணமே யாரணமே
யன்னே முதுகிரியா ராரமுதே - மன்னேயென் 174

நேத்திப் பணிந்தங் கெழுந்து காஞ்சிரமேற்
சேர்த்துப்பின் கைகட்டிச் சென்றுநின்று - தீர்த்தனே 175

யுன்பவனி கண்டங் குனதுகடைக் கண்ணோக்க
மன்புடனே பெற்ற வரிவைதா - னின்பம் 176

பெறுவ தலாலவித்தைப் பேரிருளில் வாடி
யுறுவளோ யாவு முதிக்கச் - செறியும் 177

பகுதியெனும் பௌவத்துப் பாடொலியி னாலே
மிகுதி வருந்துவளோ மேனி - யகமென்று 178

மூலவகங் காரமெனு மூரிமத வேளினாற்
சால மயங்கத் தகுவளோ - கோலியே 179

கத்துசம யக்குயிலின் காரொலியா லானந்த
நித்திரைபண் ணாது நிகழ்வளோ - சுத்தமுறுஞ் 180

சாத்திக மாயையெனுஞ் சந்திரனல் வெம்புவளோ
காத்தாள்வாய் மற்றிவளைக் காணென்றே - யாத்தன் 181

திருவடியில் விண்ணப்பஞ் செய்து வணங்கி
யிருமைதரு மிவ்வுலக மெல்லா - மொருமைபெறு 182

பேரின்ப மாகியென்றும் பேரா திருந்தவிந்தச்
சீரின்ப நாயேன் செறிந்தோங்கத் - தாரன்பா 183

யின்றிவளுக் கீத லெழில்வள்ளா லென்றியம்பி
நன்றெனவே சம்மதிப்ப நன்குரைத்து - மன்றலுறு

சற்குமர தேவன் றருங்குவளை மாலைநெஞ்சே
யிற்பெறவே வாங்கிவா வின்று. 185

துதி

எவ்வுயிர்க்குந் தாயா யிருந்தின் பழுதளிக்குஞ்
செவ்விதரு சற்குமர தேவன்பா—லவ்வியந்தீர்
நெஞ்சமே செங்குவளை நீண்மாலை வாங்கிவரச்
செஞ்சவே தூதாகிச் செல்.

வாழி

சிவன்றிரு வுருவா மைந்த சிந்மய வெழுத்தும் வாழி
நலந்தரு நீறும் வாழி நயநகன் மணியும் வாழி
கவின்றறு குமார தேவன் கழலிணை யிரண்டும் வாழி
யவன்றிரு வடியார் தம்மோ டாருயி ரனைத்தும் வாழி.

குமாரதேவர் நெஞ்சுவிடுதூது முற்றிற்று



உ

சிவமயம்

ஸ்ரீ சிதம்பரசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# குமார தேவர் பதிகம்

.......O.......

கங்கையு மரவுந் திங்களுஞ் சடையுங்
கண்ணமர் பாலமுங் கமழுங்
கடுக்கையொண் டொடையுங் கரியுரி யுடையுங்
காரிகை வாழிடப் புறமும்
பங்கயக் கண்ணன் விழியமர் பதமும்
பரிவுடன் காந்தரு ளுருவாய்ப்
பாரினி லடியர் பவக்கட றுடைத்துப்
பனிப்பறு பிரமசா கரத்தின்
மங்கிடா தழுந்தித் தங்கவைத் தாள
வந்தனை யெளியனேன் பவமு
மாயுமென் றேத வழக்கதுண் டெனக்கு
மாய்த்திட லுன்கட னுமாற்
கொங்கவிழ் குழற்கூட் டகிற்புகை வேள்விப்
புகையொடுங் குழமுறும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. (1)

செங்கையி னீறு பெற்றுளோர் வெய்ய
தீவினை யற்றுளோர் நின்றாட்
டிகழ்புன லுண்டோ ரன்னையர் கொங்கைத்
தியபான் மீட்டுணார் நின்னை

யங்கையாற் றொழுதோர் சிரத்தினாற் பணிந்தோ
ரவனிபொன் னுலகினைப் புரக்கு
மாசராய் வாழ்ந்து வீட்டினை யடைவ
ராமெனி னின்பெரு மையினை
யிங்குநான் மறையுஞ் சேடனு மிரவா
மிரட்டைநா வும்புகழ் வரிதா
மென்னவே துணிந்து மெளியனேன் புகழ்வா
னெண்ணிட னகைப்பதா மன்றோ
கொங்கைக டதும்ப மங்கையர் சிலம்பு
குமுறவே நடித்திடும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கிவீற் றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. (2)

அஞ்சலென் றுன்கை யடியனேன் முடியி
லருளொடும் வைத்துமா மலர்மே
லயனியா னுதிக்க வனுதினந் தீட்டு
மாணியை நாணுற முறித்தாய்
வெஞ்சினத் தறுகட் செங்கணேற் றெருமை
மேல்வருங் காலனு றென்னை
வீக்குவன் பாசக் கயிற்றினை யறுத்தாய்
வினையனேன் றனக்கினி தமைத்த
வெஞ்சலி லிருபத் தெட்டுயர் கோடி
யெனுநர கக்குழி யனைத்து
மிடருட னகலத் திடாது செய்தா
யேழையே னியற்று கைம்மாறென்
குஞ்சரக் கோடுந் தாளமு மகிலுங
கொணருமுத் தாறுசூழ் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. (3)

ஆம்பல்சேர் தேறற் கொப்பளித் திடுக
லனையநின் வாய்மொழி வலிய
வைம்புல மென்னுங் கரியினை யடக்கு
மங்குச மோமன மென்னு
மேம்படு புரவி கொட்புற லடக்கும்
வெவ்விய கலினமோ கொடிய
வினைதரு கருமேந் தியமெனும் வீர
விறலினர் தஞ்சிலு கடக்குந்
தூம்புடை யெயிற்றுக் கட்செவிக் கயிறோ
துறந்திடு முடலெனுந் தேரின்
றொடக்கினை யறுக்கு மாங்கொலோ வமுதோ
சுவைக்கரும் போகனி ரசமோ
கூம்பலின் றலர்ந்த நிலமுஞ் சேலுங்
குலவிய பண்ணைசூழ் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
குமாரதே வென்னுமா முனியே. (4)

அந்திவெண் பிறையை யனையவொண் ணுதலா
ரகிற்கமழ் முகிற்குழ றனக்கே
யாலமு மமுது மமர்ந்தகட் கயற்கே
யாம்பலை யனையவாய் மொழிக்கே
கந்தடு களிற்றின் கோட்டினைக் கோங்கைக்
கமலநாண் முகையினைப் பழித்துக்
கனகமந் தாத்தைக் கடுக்கும்வண் ணகிற்கே
காதலா யறநெறி மறந்திங்
கிந்தமா நிலத்திற் பிறப்பெனு மோரே
ழிருங்கட லிடைவிழுந் திளைத்த
வென்னைநின் கருணைக் கலத்திடை யிவர்வித்
தினியவீ டுறவருள் புரிவாய்

கொந்தவிழ் மலர்ப்பூம் பொங்கரு மெயிலுங்
    கோதறச் சூழ்தரு விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
    குமாரதே வென்னுமா முனியே. (5)

அருக்கனே வகத்தி லாணவ விருளுக்
    கன்றிய மாயையாம் வெய்யி
லகற்றிட வெண்ணெண் கலைகளா னிறைந்தே
    யருளமு தந்தனைப் பொழிந்து
திருக்கிள ரடியார் கண்மலர்க்குவளை
    திறந்துநீர்த் தேன்பொழிந் திடவே
சிவப்பிரகாசங் காட்டிமீ தெழுந்த
    திங்களோ கார்மிக மென்னுஞ்
சுருக்கமில் கடற்கு வடவையோ பாவத்
    துகளெனுங் காட்டினுக் கனலோ
துன்னிய காமக் கனற்குமா முகிலோ
    சுடருநின் பதத்தியல் புணரேன்
குருக்கிளர் மணிகள் குயிற்றுபொன்மாட
    கூடங்க ளொளிர்தரும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
    குமாரதே வென்னுமா முனியே. (6)

விரைவுறு மந்தக் கரணமோ டுமூன்றும்
    வீண்படு விடயமே விழைந்து
மிகுத்திடு காமக் குரோதமே முதலா
    மேதையில் குணங்களான் மெலிந்துந்
தரையினிற் றுக்க சுகமவை யடுக்குந்
    தன்மையா லனுதினந் தளர்ந்துந்
தக்கவே டணைகண் மூன்றினாற் றவித்துஞ்
    சாலவே மயங்குமென் றன்னைக்

கரையறு முத்தி யிலவண நீரைக்
　　கார்முகர் தகைக்கச டறத்தீங்
ககலவே செய்யு மாறுபோ னீயென்
　　கசடறுத் தாண்டருள் புரிவாய்
குரைகட லெழுந்த விண்ணிவர் தேரைக்
　　குளிர்பொழி றடுத்திடும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
　　குமாரதே வென்னுமா முனியே. (7)

அரியவா ணவமா மண்டம்விண் டடியே
　　னவனியில் வெளிப்படப் பெரிது
மரியதோர் கமட மழகிய வனமீ
　　னஞ்சிறைப் புள்ளிவை போலக்
கருதுநெஞ் சதனு ளுன்னியே கடைக்கட்
　　கருணையா னோக்கியே பரிசங்
களிப்புடன் செய்தே யளிப்பது கொடியேன்
　　கணித்தினி தெங்ஙன மறிவே
னெருமையின் குலங்கள் சரோருக மலரை
　　யிக்கினைச் செந்நெலைக் கறிக்க
விருகடை வாயாற் சொரியும் வெண்டாள
　　மிளநிலா வெறித்தலிற் குமுதங்
குருமதி யெனவே நனைமுறுக் கவிழ்ந்து
　　கொங்குயிர் பண்ணைசூழ் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
　　குமாரதே வென்னுமா முனியே. (8)

இரவுநண் பகலு மிலாத மத்தியத்தி
　　லிருந்திடுந் துருவனைப் போல
விரண்டுதட் டகத்து நிறைபொருள் சமனு
　　யிருந்தநற் றராசுமுட் போலப்

புரையுறு சகல கேவல மதனிற்
 பொருந்திடா தினியசுத் தத்திற்
பொருந்தியே யகந்தை தவிர்ந்துநான் வாழப்
 பொருந்தவைத் தாண்டருள் புரிவா
யிரவியி னிரத மிழுக்குமேழ் பரியி
 னெழிற்குரந் தாக்கவே தெங்கி
னிருங்கனி தகர்ந்தங் கிழிந்திடு மிளநீ
 ரிலஞ்சியிற் பண்ணையிற் றதும்பிக்
குரைபுனன் முத்த நதியினிற் பெருகுங்
 குறைவிலாச் சீர்திகழ் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கி வீற்றிருக்குங்
 குமாரதே வென்னுமா முனியே. (9)

கன்றினுக் கிரங்கிச் சுரபிவந் தின்பால்
 கதறியே யினிதளித் திடுமக்
கன்றினற் சுரபிக் கனுவள வேனுங்
 கருதுகைம் மாறிலா ததுபோ
லொன்றுநன் கறியா வேழையிங் கிவனென்
 றுன்னிரு தாட்சரோ ருகமென்
னுச்சிமேல் வைத்துத் தலையளி செய்தா
 யுனக்குநான் செய்வதொன் றிலதாற்
றுன்னிய செந்நெல் கன்னல்பூங் கதலி
 தோமறு பூகமொண் டெங்கு
துருமமு நெருங்கி வரிசையி னிருத்தல்
 சுராரிழிந் தேநதி மூழ்கிக்
கொன்றைமா லிகையான் பதந்தொழு தேகும்
 படியெனக் குலவிடும் விருத்தக்
குன்றினி லமர்ந்து விளங்கிவீற் றிருக்குங்
 குமாரதே வென்னுமா முனியே. (10)

குமாரதேவர் பதிகம் முற்றிற்று

## பதிப்பித்த புத்தகங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சித்தாந்த சிகாமணி (மூலமும் - உரையும்) | 2 | 8 | 0 |
| 2. | வசவபுராணம் (மூலமும் - உரையும்) ... | 8 | 0 | 0 |
| 3. | வீராசாரக் கட்டளை ... | 0 | 1 | |
| 4. | பிக்ஷாடன நவமணிமாலை (மூலமும் - உரையும்) | 0 | 2 | |
| 5. | பெரிய நாயகியம்மை விருத்தம் (மூலமும் - உரையும்) ... | 0 | 3 | |
| 6. | வீரசைவ விளக்க வினுவிடை ... | 0 | 12 | |
| 7. | அநுபவஸாரம் ... | 0 | 5 | 0 |
| 8. | மணிவாசகப்பெருமான் வரலாற்று வினுவிடை | 0 | 7 | 0 |
| 9. | ஸ்ரீ வைஷ்ணவமும் வீரசைவமும் ... | 0 | 2 | 0 |
| 10. | தகனமும் கனனமும் ... | 0 | 1 | 0 |
| 11. | அல்லமாப் பிரபு தேவர் சரித்திரம் ... | 0 | 1 | 0 |
| 12. | அக்கமகாதேவி சரித்திரம் ... | 0 | 1 | |



## இனிப்பதிப்பிக்கும் புத்தகங்கள்

1. வீரசைவ சிவபூஜா விதி
2. வீராகமம்
3. இஷ்டலிங்க வபிஷேகமாலை யுரை
4. பழமலை யந்தாதி யுரை
5. பிரபுலிங்கலீலை யுரை
6. இஷ்டலிங்க வகவல் உரை
7. வசவதேவர் சரித்திரம்
8. வீரசைவ போதம்
9. வீரசைவ தத்துவப் பிரகாசிகை
10. இல்லற தருமம்
11. வீரசைவ மதம்
12. அத்வைத மதம்
13. விசிஷ்டாத்வைத மதம்
14. த்வைத மதம்